*Kumaran̲*

*Āram 19, muttu 15*

*November 27, 1941*

Record no. 313

REGD. NO. M. 1823. 14 பக்கங்கள். KUMARAN WEEKLY.

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஷ 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 19 | காரைக்குடி விஷு-ஷ கார்த்திகை-மீ 12-உ (27—11—41) | முத்து 15

## சீனப் பெண்கள் முன்னேற்றம்

### தேசப் பாதுகாப்பு ஊழியமும், மாதர் ஸ்தாபனங்களும்

(ஸ்ரீமதி கமலாதேவி)

[சீனாவில், மாதர் இயக்கம் தேசப்பாதுகாப்பு வேலையில் எவ்வாறு ஈடுபட்டு உழைத்து வருகிறதென்பதை விளக்கி ஸ்ரீமதி கமலாதேவி வரைந்திருக்கும் கட்டுரையின் சாரம் வருமாறு:]

இன்றைய மாதர் உலகத்தைப் பரிசிலனை செய்தால் ஒரு உண்மை வெளிப்படுகிறது: கீழ் நாடுகளிலே பெண்களின் உழைப்பு மேனாட்டிலிருப்பதைவிட அதிக அஸ்திவார பலமுள்ளதாக இருப்பது புலப்படும். ஆடவருடன் நீண்ட போர் தொடுக்கவோ, அவர்கள் மீது பாணந்தொடுக்கவோ கீழ் திசைப் பெண்கள் சமூகம் எதற்கும் தேவை யேற்படவில்லை. வாழ்க்கையில் அவர்கள் தங்களுக்குரிய ஸ்தானத்தை இயற்கையாகவும், ஆடவரிடமிருந்து அதிக எதிர்ப்பின்றியும் பெற முடிந்திருக்கிறது. மேனாட்டுப் பெண்களின் அனுபவம் இப்படியன்று. "அமுக்கப்பட்ட" கீழ் நாட்டுப் பெண்கள் என்று மேனாட்டாரால் புலிந்து சொல்லப்படுபவர்களின் இந்நிலைமை அதிகம் ஊக்கம் அளிப்பதாகும். எனவே இன்று, உலகில் புகழ் பெற்று விளங்கும் மாதரசிகளிற் சிலர் கீழ்நாட்டுக்காரர்களாக இருப்பது அதிசயமல்ல. மேற்திசை நாடுகள் எல்லாவற்றிலும், அதிகப்படியான உரிமைகளுக்காகப் பெண்கள் போராடுவதைக் காண்கின்றோம். மேனாட்டை அப்படியே பின்பற்றும் ஜப்பான் போன்ற நாடுகளைத் தவிர இதர நாடுகளிலெல்லாம் இந்நிலைமை தான் இருந்துவருகிறது.

உலகத்திலே, சீனப் பெண்களுக்கிருப்பது போன்ற சம உரிமைகள் வேறு நாடுகளிலில்லை. சட்டப்படி அவர்கள் ஆடவருக்குச் சம அந்தஸ்தில் விளங்குகிறார்கள். பரஸ்பர சம்மதத்துடன் தம்பதிகள் விவாக ரத்து செய்துகொள்ள வசதியுள்ள மிகச் சில தேசங்களில் சீனாவும் ஒன்று. இரு கட்சி வக்கீல்கள் மட்டும் சந்தித்து முடிவு செய்து கொள்ள இயலும்—வழக்கு, கற்பனைக் குற்றச்சாட்டுகள் எதுவும் தேவையில்லை.

இந்தியாவோடு ஒப்பு நோக்கும் போது, சீனப் பெண்கள் இயக்கம் சமீப காலத்தில் அபிவிருத்தியுற்றது தான். இன்று அங்குள்ள 21 மாகாணங்களிலும் 317 மாதர் ஸ்தாபனங்கள் இருக்கின்றன. அவற்றின் ஊழியம் பலதிறப்பட்டது. ஜெனரல் ஷியாங்கே ஷேக் ஆரம்பித்துள்ள புத்துயிரியக்கத்தின் மாதர் ஆலோசனை சபையால் இவ்வேலையில் ஒரு பகுதி நிறைவேற்றப்படுகிறது. யுத்த மாரம்பித்ததோடு அங்கு நூற்றுக்கணக்கான ஸ்தாபனங்கள் எழும்பின. அவற்றின் வேலையை இணைத்து ஒருமுகப்படுத்தவே இந்தச் சபை அமைக்கப்பட்டது. இந்தச் சபையின் வேலை சீனாவில் என்றும் அறியாத பலன்களைத் தந்திருக்கின்றது. ஒன்பது இலாகாக்கள் மூலம் இச்சபை தனது வேலையை நடத்துகிறது.

சகல மாதர் ஸ்தாபனங்களின் வேலைகளையும் இணைக்கும் இலாகா ஒன்று; பெண்களுடைய நலனுக்கு உகந்த தேசிய இயக்கங்களுடன் இந்த ஸ்தாபனங்களைச் சம்பந்தப்படுத்துவதும் இந்த இலாகாதான். அடுத்தது பயிற்சியளிக்கும் இலாகா. பயிற்சி பெற்ற ஊழியர்கள் இல்லாவிட்டால் நீண்டகாலம் நிலைநிற்கும் திட்டமான வேலையெதுவும் உருப்படியாகாது. கிராம சமூகங்களுடன் எப்படிக் கலந்து கொள்வது, கூட்டுக் கைத்தொழில்களை அமைப்பது, முதியோர் கல்வியைப் பரப்புவது, முதல் உதவி சம்பந்தமான போதனை அளிப்பது, ஆரோக்கிய விதிகளைப் போதிப்பது, வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது முதலிய பல்வேறு உபயோககரமான விஷயங்களிலும், பெண்களுக்குப் பயிற்சி அளிக்க ஆங்காங்கே பயிற்சி ஸ்தாபனங்கள் திறக்கப்பட்டிருக்கின்றன. யுத்த ஊழியம், அபாயகால உதவி, செஞ்சிலுவை ஊழியம் முதலியவற்றிலும் பயிற்சியளிக்கப்படுகிறது. யுத்தப் பிரதேச ஊழிய இலாகாவில், படைக்கு ஆள் திரட்டுவது முதல், காயமுற்றவரைச் சிகிச்சை செய்வது வரையுள்ள சகல ஊழியங்களும் இந்த இலாகாவுக்கு உட்பட்டனவாகும். ஆங்காங்கே யுள்ள விவசாயப் பெண்களை இந்த ஊழியங்களுக்காகப் பழக்குகிறார்கள். யுத்தரங்க ஆஸ்பத்திரிகளிலும், மத்திய வைத்தியசாலைகளிலும் இவர்கள் ஊழியம் புரிகிறார்கள். காயமுற்றோர்க்குக் கடிதமெழுதல், எழுத்து வாசனையற்றவர்க்குக் கற்பித்தல், பாட்டு, நடிப்பு மூலம் அவர்களுக்கு உற்சாகமூட்டுதல் இவையும் இவர்களது கடமைகள் தான். ராணுவத்துக்கும் பொது ஜனங்களுக்குமுள்ள தொடர்பை நெருக்குவதே இவர்களது முக்கிய, குறிப்பிடத்தக்க ஊழியமாகும்.

சீன ராணுவத்தின் பழய நிலையையும் இன்றைய நிலையையும் தாரதம்மியப் படுத்திப் பார்த்தால் இந்த ஊழியத்தின் மகிமை தெரியும். பணத்திற்காகப் படையில் சேர்தல் என்பது போய், தேசபக்தியுள்ள, சுதந்திரப் பிரியர்களால், இப்போது படைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. பொது மக்களும் ராணுவ வீரர்களும் பரஸ்பரம் ஒரே சிரத்தை உடையவர்களாக இருக்கின்றார்கள், சீனா போன்ற பழமை விரும்பிகள் நிறைந்த நாட்டில் பெண்கள் இத்தகைய ஊழியம் புரிவது லேசானதல்ல. ஆனால், இவ் விஷயத்தில் பெண்கள் பொது மக்களின் நம்பிக்கையையும் பாராட்டுதலையும் பூரணமாகப் பெற்று விட்டார்கள் என்பது இரு சாராருக்கும் பெருமையளிப்பதாகும்.

கிராம ஊழிய இலாகாவின் வேலை ஜனங்களுக்கு அரசியல் போதனை செய்வதுதான். டாக்டர் ஸன்னின் மூன்று தத்துவங்கள், முக்கியமாக ஜனங்களுடைய ஜீவனோபாய தத்துவம், இவைதான் முக்கியமாகக் கற்பிக்கப்படுகின்றன. ஜனங்களுடைய கலாசாரத்தை அபிவிருத்தி செய்ய இந்த இலாகா கலாசார இலாகாவுடன் ஒத்துழைக்கின்றது. வீட்டுக்கு வீடு பிரசாரம் செய்தல், பொதுக் கூட்டங்கள் போடுதல், வகுப்புகள் நடத்துதல், நாடகங்கள் நடிப்பது, தேசிய முக்கியத்வம் வாய்ந்த சம்பவங்களை விளக்கச் சுவரொட்டிப் படங்கள் வெளியிடுதல்—இவற்றின் மூலம் இவ்வேலை செய்யப்படுகிறது.

ஜீவனோபாய் இலாகா சமூகப் பிரச்னைகளில் ஈடுபடுகிறது. உத்யோகந் தேடிக் கொடுக்கும் ஸ்தாபனமாகவும் இது விளங்குகிறது. ராணுவங்களில் உள்ள வீரர்களைப்பற்றிய செய்திகளை அறிவிப்பது, அவர்களின் பெண்களின் சார்பாகக் கடிதங்கள் அனுப்புவது முதலியனவும் இந்த இலாகாவின் வேலைகளாகும். தேசத்திலுள்ள பெண்களின் பொருளாதார, சமூக அந்தஸ்தை அபிவிருத்தி செய்வதற்கான ஊழியத்தில் ஈடுபடுவதற்கு ஏற்ற ஒரு பயிற்சி ஸ்தாபனத்தையும் இது நடத்துகிறது.

யுத்த இலாகா முதலிய ஊழிய ஸ்தாபனங்களுக்குத் தேவையான சாதனங்களைச் சேகரித்துக் கொடுப்பது கலாசார இலாகாவின் வேலை. செய்தித் தாள்களையும், வார மாதப் பத்திரிகைகளையும் இது வெளியிடுகிறது. சுதந்திர சீனாவின் சிறந்த தினசரியும், சர்க்கார் பத்திரிகையுமான 'ஸென்டிரல் டெய்லி நியூ'ஸில் மாதர்கட்கென ஒரு பகுதியை இந்த இலாகாவே நடத்தி வருகிறது.

மாதர் சங்கம், அனாதைக் குழந்தைகள் சங்கம் இவை யெல்லாம் யுத்த நிவாரண இலாகாவுக்கு உட்பட்டவை. பணம் திரட்டுவது.

(14-ம் பக்கம் பார்க்க)

## சென்னை ரேடியோ

ஒலி பரப்புகள்:— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-00 முதல் 3 வரை; மாலை 4 முதல் இரவு 10-30 வரை.
தமிழில் செய்திகள்:— காலை 7-40; பிற்பகல் 2-00; இரவு 7-45.

### நவம்பர் 27உ வியாழன்

1·00—1·30, 2·10—2·40 வி. வி. கிருஷ்ணமூர்த்தி ஐயர் பாட்டு
5·00—5·45 எஸ். இந்திரகோபால செட்டி வயலின்
6·35—7·00 கோதண்டபாணி புல்லாங்குழல்
8·00—9·15 திருச்சியில் உள்ளபடி

### 28உ வெள்ளி

1·00—1·30 எம். அப்ரஹாம் பாகவதர் பாட்டு
5·00—5·45, 7·10—7·20, 8·00—8·15 குமாரி சூடாமணி பாட்டு
6·05—6·35 எம். என். வெங்கடவரத பிள்ளை பாட்டு
6·35—7·00 சிஷ்ய ஸ்ரீராம சாஸ்திரி வீணை

### 29உ சனி

1·00—1·30, 6·05—6·35 பி. எம். கடேச பிள்ளை பாட்டு
5·00—5·45, 6·35—7·00 கீதாவாத்திய கோஷ்டி
5·45—6·00 ஸ்ரீமதி வி. வி. ஜயலக்ஷ்மி வீணை, பாட்டு
8·05—9·15 காரைக்குடி சாம்பசிவய்யர் வீணை

### 30உ ஞாயிறு

5·00—5·45, 8·00—8·30 எமனி சங்கர சாஸ்திரி வீணை
6·05—6·30 ஸ்ரீமதி எ. வி. செல்லம்மாள் பாட்டு
7·00—7·30 ஸ்ரீமதி பி. எஸ். சிவபாக்கியம் பாட்டு
8·30—9·00 எம்.எஸ்.நடராஜய்யர் பாட்டு

### டிசம்பர் 1உ திங்கள்

1·00—1·30 டி.ஆர்.வைத்தீஸ்வரன் பாட்டு
1·35—2·00, 6·35—7·00 ஸ்ரீமதி எஸ். வஞ்சுளம் ஷை
5·00—5·45, 10·00—10·30 ஸ்ரீமதி ராஜம் பாலசுப்ரமண்யம் வீணை, பாட்டு
6·03—6·35 டி. ஜி. கண்ணன் பாட்டு
8·00—9·00 திருச்சியில் உள்ளபடி

### 2உ செவ்வாய்

1·00—1·30, 6·05—6·35 டி. பி. சிவசங்கரம்பிள்ளை புல்லாங்குழல்
2·10—2·40 ஸ்ரீமதி பி. யமுனாவதி அம்மாள் பாட்டு
5·00—5·45, 6·35—6·45 கே. மகாதேவன் பாட்டு
7·10—7·25 ஸ்ரீமதி வி. ஆர். சந்த்ரா பாட்டு.
8·00—9·00 முடிகொண்டான் வி. வெங்கட்ராமய்யர் பாட்டு

### 3உ புதன்

1·00—1·35 ஸ்ரீமதி ஜி. கல்யாணி வீணை
5·00—5·45 ஆர்.சுந்தரம் பிள்ளை நாதசுரம்
5·45—6·00, 7·10—7·25 ஆலாபூ வீராஜு பாட்டு
6·05—6·35, 8·00—8·30 வி. எஸ். ரத்தினஸாமி பாட்டு

### 4உ வியாழன்

1·00—1·30, 2·10—2·40 ஆர். ரமணி பாட்டு
5·00—5·45 டி. பாலசுப்பராயலு வயலின்
6·35—7·00 பி. விஸ்வநாத ராவ் புல்லாங்குழல்
8·00—9·15 திருச்சியில் உள்ளபடி.

## யுத்த நிதியும் ஸ்தலஸ்தாபனங்களும்

### தாராளமாக விவாதிக்க உரிமை உண்டா?

அலகாபாத் நகர சபைக் கூட்டத்தில், யுத்த நிதிக்கு ரூ 15,000 கொடுக்கவேண்டுமென்ற ஒரு தீர்மானம் ஆலோசனைக்கு வரவிருந்தது. ஆனால், இது சம்பந்தமாகச் சபையில் தாராளமாக விவாதிக்க இடமில்லை யென்று தெரியவருவதால், அதற்கு அனுமதியளிக்க முடியாதென்று தலைவர் ஸ்ரீ பாஸு மறுத்து விட்டார். சென்ற மே மாதம் இத்தீர்மானம் வந்த போது, இது சம்பந்தமாக அங்கத்தினர்கள் தங்கள் அபிப்பிராயங்களைத் தாராளமாக வெளியிட இடமுண்டா என்றும், அப்படி வெளியிட்டால் பாதுகாப்பு சட்டத்தினின்றும் பாதுகாக்கப்படுவார்களா என்றும் ஒரு பிரச்னை கிளப்பப்பட்டது. அதன் மேல் தலைவர் சர்க்காருக்கு எழுதிக் கேட்டார். சர்க்கார் அளித்துள்ள பதிலில், இவ்விஷயத்தில் ஷை சட்டத்தை அமுல் நடத்தும் பொறுப்புள்ள ஜில்லா மாஜிஸ்திரேட்டிடமே யோசனை கேட்க வேண்டு மென்றும், சர்க்கார் எவ்வித முடிவான யோசனையும் சொல்ல முடியாதென்றும், சட்டம் இருக்கிற முறையில், சபை மெம்பர்களுக்குப் பிரத்தியேகப் பாதுகாப்பு ஒன்றும் இல்லை யென்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. தலைவர் சர்க்கார் கடிதத்தை சபை முன்பு வைத்து தீர்மானத்தை எதிர்ப்போரைச் சட்டத்தினின்றும் காப்பாற்ற இடமில்லை யென்று தெரிவதாலும், அவர்களுக்குள்ள மூலாதார உரிமைகளை மறுப்பதாலும், பிரேரணையை அனுமதிக்க முடியாதென்று தெரிவித்தார்.

### பஞ்சாயத்துகளுக்கு உத்தரவு

சென்னை கவர்ன்மெண்டார் பின்வரும் அறிக்கையை வெளியிட்டிருக்கின்றனர்:—

பஞ்சாயத்துப் போர்டுகள் தங்கள் செல்வ நிலையைக் கவனியாது மிகவும் அதிகமாக குறுகிய கால நோட்டீஸுடன் கூட்டப்பட்ட கூட்டத்தில் யுத்தநிதிக்கு பணமளிப்பதாகத் தீர்மானிக்கின்றன வென கவர்ன்மெண்டிற்குத் தெரியவருகிறது. ஆகவே கவர்ன்மெண்டார் இதில் பின் வரும் நிபந்தனை யேற்படுத்தியிருக்கின்றனர்: (1) போதிய முன்னறிவிப்புடன் கூட்டப்பட்ட கூட்டத்திலேயே யுத்த நிதிக்குத் தொகை அனுமதிக்கப்படவேண்டும். (2) வருஷ வருமானத்தில் 100-க்கு 2½ சத விகிதத்திற்கு மேல் நன்கொடை கொடுக்கக்கூடாது; அல்லது குறைந்தபக்ஷமாக விருக்கவேண்டிய மிகுதித் தொகைக்கு மேல் காணப்படும் உபரித் தொகையையளிக்கலாம். இவ்விரண்டு தொகைகளில் எது குறைந்ததோ அதையே கொடுக்கவேண்டும். (3) தொகையை அனுப்பு முன் கலெக்டர் அனுமதியைப் பெற வேண்டும். மிகுதித் தொகையைப் பஞ்சாயத்துக்கள் யுத்தகடன் பத்திரம் வாங்குவதற்கு உபயோகிக்கலாம்.

செங்கற்பட்டில் சில பஞ்சாயத் போர்டுகள் கொடுத்த யுத்த நிதிப் பணம் திரும்பக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இனி அப்பஞ்சாயத்துக்கள் இத்தீர்மானத்தைப் புனராலோசனை செய்யவேண்டும். இனிச் செய்யும் தீர்மானங்களுக்கு இவ் விதி செல்லுபடியாகும்.

அன்பு ஒரு தனிப் பாஷை—அதைச் செவிடர்களும் கேட்கலாம்; குருடர்களும் வாசிக்கலாம்.

## இந்தியாவின் ஜனத் தொகை

### 10 வருஷத்தில் 15 சதமான உயர்வு

1941, மார்ச் முதல் தேதியன்று இந்தியாவின் ஜனத்தொகை முப்பத்தெட்டுக் கோடி எண்பத்தெட்டு லட்சமாகும். 1941ல் இது 33 கோடி 81 லட்சமாக இருந்தது. பத்து வருஷ காலத்தில் பதினைந்து சதமான அளவு உயர்ந்திருக்கிறது. பிரிட்டிஷ் இந்தியாவில் 15.2 சதமான உயர்வும், சமஸ்தானங்களில் 14.3 சதமான உயர்வும் ஏற்பட்டிருக்கின்றன. இந்தியா முற்றும் படித்தவர் தொகை 4,73,22,700. வட மேற்கு எல்லைப்புற மாகாணத்தில் தான் ஜனத்தொகையில் அதிக உயர்வு (25·2 சதமானம்) ஏற்பட்டிருக்கிறது. வங்காளத்தில்தான் படித்தவர் தொகை அதிகம். அடுத்தபடி சென்னை வருகிறது. தலைநகரான டில்லியில் ஜனத்தொகை 44·1% உயர்ந்திருக்கிறது.

மாகாணங்கள், சமஸ்தானங்கள் இவற்றின் ஜனத்தொகை, படித்தவர் தொகை பற்றிய புள்ளி விவரங்கள் வருமாறு:—

| மாகாணம் | ஜனத்தொகை (ஆயிரக் கணக்கில்) | படித்தவர் (நூற்றுக் கணக்கில்) |
|---|---|---|
| சென்னை | 49,342 | 64,20,9 |
| பம்பாய் | 20,856 | 40,67,8 |
| வங்காளம் | 60,314 | 97,20,4 |
| ஐ. மா. | 55,021 | 46,53,3 |
| பஞ்சாப் | 28,419 | 36,65,7 |
| பீஹார் | 36,340 | 33,59,7 |
| ம. மா-வும் பீராரும் | 16,822 | 19,09,7 |
| அஸ்ஸாம் | 10,205 | 11,74,3 |
| வடமேற்கு எல்லைப்புறம் | 3,038 | 2,33,9 |
| ஒரிஸ்ஸா | 8,729 | 9,48,2 |
| சிந்து | 4,537 | 4,73,8 |
| சமஸ்தானங்கள் | | |
| பரோடா | 2,855 | 6,56,8 |
| கொச்சி | 1,423 | 5,04,1 |
| ஹைதராபாத் | 16,184 | 11,11,2 |
| காஷ்மீர் | 4,021 | 2,64,2 |
| புதுக்கோட்டை, பங்கனப்பள்ளி, சாந்தூர் | 499 | 661 |
| மைசூர் | 7,329 | 8,96,4 |
| திருவிதாங்கூர் | 6,070 | 28,94,4 |

### ராணுவச் செலவு

#### ஒரு நாளைக்கு 25 லக்ஷம்

ராஜாங்க சபையில் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்குப் பதிலில் யுத்தத்துக்கு முன் இந்திய ராணுவத்தின் தினசரிச் செலவு 12 லக்ஷம் ரூபாய் என்றும், இப்போது தினமொன்றுக்கு 25 லக்ஷம் செலவாகிறதென்றும் தெரிவிக்கப்பட்டது. 1940-41 வருஷத்தில் ராணுவத்திற்காகச் செலவான தொகை 73¾ கோடி. இந்த வருஷம் முதல் ஐந்து மாதங்களில் மாதமொன்றுக்கு 7 கோடி ரூபாய் வீதம் செலவிடப்படுகிறது.

### 35000 இந்தியத் தொழிலாளர் தேவை

#### பர்மிய சர்க்கார் வேண்டுகோள்

இந்தியாவிலிருந்து 35,000 சாதாரணத் தொழிலாளிகளைப் பர்மாவில் குடியேற அனுமதிக்கும்படி பர்மிய சர்க்கார் இந்திய சர்க்காருக்கு ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கின்றனர்.

## திருச்சி ரேடியோ

ஒலி பரப்புகள்:— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1 முதல் 3 வரை; மாலை 4 முதல் 10 வரை.
தமிழில் செய்திகள்:— காலை 7-40; பிற்பகல் 2-00; இரவு 7-45.

### நவம்பர் 27உ வியாழன்

1·35—2·00 குமாரிகள் கே. லக்ஷ்மி, வேதம் பாட்டு
5·00—5·45, 6·30—7·00 மைசூர் வி. துரைஸ்வாமி ஐயங்கார் வீணை.
8·00—9·20 செம்பை வைத்யநாத பாகவதர் பாட்டு, டி. குருராஜப்பா வயலின், உமையாள்புரம் என். கணேசய்யர் மிருதங்கம்

### 28உ வெள்ளி

5·00—5·45, 8·40—9·20 ஸ்ரீமதி கமலா கிருஷ்ணமூர்த்தி பாட்டு
6·30—7·00, 8·00—8·45 காஞ்சீவரம் வி. கங்காதரம் பிள்ளை நாதசுரம்

### 29உ சனி

1·35—2·00, 5·00—5·45 எஸ். நாகநாதய்யர் பாட்டு
6·30—7·00, 8·00—9·15 சென்னையிலுள்ளபடி

### 30உ ஞாயிறு

1·35—2·00, 6·30—7·00 காட்டுப்புத்தூர் ராமகிருஷ்ணய்யர் வயலின்
2·05—2·30, 8·45—9·20 ஆர். தண்டபாணி ஐயர் பாட்டு
5·00—5·45, 8·00—8·45 ஸ்ரீமதி எம். ஆர். சியாமளா தேவி வீணை, பாட்டு

### டிசம்பர் 1உ திங்கள்

1·35—2·00, 6·30—7·15 உமையாள்புரம் ஜி. கல்யாணராமய்யர் பாட்டு
5·00—5·45 முடிகொண்டான் வ. ராஜமாணிக்கம் நாதசுரம்
8·00—9·20 மன்னார்குடி ராஜகோபால பிள்ளை பாட்டு, டி. குருராஜப்பா வயலின், என். கணேசய்யர் மிருதங்கம்

### 2உ செவ்வாய்

1·35—2·00, 5·00—5·45 திருக்குறுங்குடி வெங்கடராம ஐயங்கார் கோட்டு வாத்தியம்
6·30—7·00 திரு அண்ணமலை—இசை நிகழ்ச்சி
7·30—7·45 கல்லூரிச் சேவகன் — சிறு நாடகம்
8·00—9·00 சென்னையில் உள்ளபடி
9·00—9·20 தாரகை—சிறு கதை

### 3உ புதன்

1·35—2·00 ஆர். ராமஸ்வாமி செட்டியார் பாட்டு
5·00—5·45, 8·00—8·45 டி. வி. நமசிவாயம் பாட்டு
6·30—7·00, 8·45—9·20 கே. விஜயராகவய்யர் வயலின்

### 4உ வியாழன்

1·35—2·00 என். வெங்கடாத்ரி ஐயங்கார் பாட்டு
5·00—5·45, 6·30—7·15 திருநெல்வேலி சங்கர கோபாலன் புல்லாங்குழல்
8·00—9·20 சீவலூர் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை பாட்டு, டி. எஸ். சம்பந்தம் பிள்ளை வயலின், புதுக்கோட்டை த. ஸ்வாமிநாத பிள்ளை மிருதங்கம்

### ரேடியோ லைசென்சுகள்

1941 அக்டோபர் மாதம் அளிக்கப்பட்ட ரேடியோ லைசன்ஸுகளின் தொகை 13,514. இவற்றில் 8947 புதுப்பிக்கப்பட்டவை; 4567 புதிதாக அளிக்கப்பட்டவை. அம்மாதம் அமுலிலிருந்த மொத்த லைசன்ஸுகள் 2,42,125 ஆகும்.

## நடப்புவட்டி விகிதங்கள்.

| மாதம் | நாள் | சென்னை | இரங்கூன் | பினங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| விக்கிரம ஐப்பசி | 30 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| கார்த்திகை | 29 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| மார்கழி | 30 | 0-6-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| தை | 29 | 0-6-0 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| மாசி | 30 | 0-6-0 | 0-4-9 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| பங்குனி | 30 | 0-6-0 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| விஷு சித்திரை | 31 | 0-6-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 | — |
| வைகாசி | 31 | 0-6-3 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | — |
| ஆனி | 32 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | — |
| ஆடி | 32 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | — |
| ஆவணி | 31 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | — |
| புரட்டாசி | 30 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | — |



தாய்லாந்து ஒரு சுதந்திர நாடு. யுத்தம் பரவிவரும் வேகத்திலே அதுவும் கொஞ்சம் உஷாராய்த்தானிருக்கிறது. அந்நாட்டைப்பற்றி பால் நார்ட்டன் என்பவர் 'ஹிந்து' பத்திரிகையில் வரைந்திருக்கும் கட்டுரையின் சாரம் வருமாறு:-

## தாய்லந்து

### பழமையும் புதுமையும் கலந்த காட்சிகள்

[பால் நார்ட்டன்]

தாய்லந்து—லட்சக்கணக்கான பேர்களுக்கு சையாம் என்றால்தான் தெரியும்—தன் காரியத்தில் யாராவது தலையிட முயன்றால் அதைத் தடுக்கத் தயாராயிருப்பதாக விளக்கமாகச் சொல்லியிருக்கிறது. முவாங் தாய்-சுதந்திரர்களின் நாடு-என்று தந்நாட்டு மக்களால் கருதப்படும் ஒரு தேசத்திலிருந்து இதைத்தான் எதிர்பார்க்கக்கூடும். ஆனால் சையாம் ஒரு சிறிய தேசம்; ஜனத்தொகை 140 லட்சத்துக்கு அதிகமில்லை. படைகளில் 50,000 பேர் கட்டுமே வில்லை. நவீன போர்க்கருவிகளோ குறைவு. ஜப்பான் இந்தோ சீனாவுக்குள் கொண்டு வைத்திருக்கும் பலமான கடல், தரை, ஆகாயப்படைகளை எதிர்த்து இவை நீண்டகாலம் நிற்குமென்று எதிர்பார்க்க முடியுமா?

பழமையும் புதுமையும் கலந்து தோன்றுவதால், தாய்லந்தைக் கிழக்கும் மேற்கும் சந்திக்கும் தேசமென்று சொல்வதுண்டு. அங்கே ஒரு புறம் நவீன முறையில் சிகிச்சையளிக்கும் வசதிகளுள்ள ஆஸ்பத்திரிகளைக் காணலாம். அவற்றிற்கடுத்தாற் போல் பாம்பும் காண்டாமிருகக் கொம்பும் கலந்த விசித்திர மருந்துகளை விற்பவர்களையும் காண்பீர்கள். ரோடுகளில் மாட்டு வண்டிகளைத் தாண்டி வேகமாக மோட்டார் கார்கள் பறக்கும். கோவில் மணியும் வயர்லஸும், ஐரோப்பிய பாங்குக் கட்டிடங்களும் மூங்கில் குடிசைகளும், நீர் மூழ்கிக் குண்டுக் கப்பல்களும் பழய மரக்கலங்களும், எலக்டிரிக் டிராம்களும் ரிக்ஷாக்களும்—இவை யெல்லாவற்றையும் பாங்காக்கில் காணலாம். தாய்லந்தில் இது பெரிய பட்டணம், அந்நாட்டின் முக்கிய வியாபார ஸ்தலமும் இதுதான். தாய்லந்தின் மொத்த வியாபாரத்தில் சுமார் 90 சதமான அளவு இந்நகர் வழியேதான் நடைபெறுகிறது.

மெனன் சேவோ பயா நதி முகத்துவாரத்தில் உள்ள ஒரு தீவிலிருக்கும் கோவில் தான் ஒரு பிரயாணிக்கு முதன் முதல் தென்படும். தாய்லந்தில் மட்டும் 17,000 கோயில்கள் இருக்கின்றனவாம். சுமார் 120,000 சதுர மைல் பிரதேசமுள்ள தாய்லந்தில் சராசரி 13 மைல்களுக்கு ஒரு கோயில் வீதமாகிறது. அந்நாட்டின் பெரும் பகுதியும் காட்டுப் பிரதேசமாகையால், பாங்காக்கில்தான் கோயில்கள் ஏராளமாக நெருக்கமாக இருக்கின்றன. அந்நகரில் ஒவ்வொரு மூன்று ஏக்கர் இடத்திலும் ஒரு ஏக்கர் இடம் கோவிலையும் அதைச் சேர்ந்த தோட்டங்களையும் சேர்ந்ததாக இருந்துவருகிறது.

அத்தேச மதம் பௌத்தம். தேசத்தினரில் பெரும் பகுதியினரும், முக்கியமாகத் தெற்கத்தியர்கள் மிக்க வைதீகர்கள். அந்நாட்டில் ஒவ்வொருவரும் தன் வாழ்க்கையில் சில மாதங்களாவது புரோகிதர்களா இருப்பது வழக்கம். சமீபகாலம் வரை அங்கு புரோகிதர்களே கல்வியூட்டி வந்தார்கள். நாட்டுப்புற ஜில்லாக்களில் இன்றும் மடாலயங்களே ஆரம்பக் கல்வியை அளித்து வருகின்றன. ஆனால், இப்போது அங்கு பல சர்க்கார் பள்ளிக்கூடங்களும், ராணுவ, சட்ட கலாசாலைகளும், உயர்ந்த யுனிவர்ஸிட்டி ஒன்றுமிருக்கின்றன.

மேல் வகுப்புகளில் ஆங்கிலம் விரிவாகக் கற்பிக்கப்படுகிறது. பிரிட்டன், அமெரிக்கா முதலிய அயல் நாடுகட்குச் சென்று படிக்க முன்வரும் மாணவர்கட்கு சர்க்கார் உபகாரச் சம்பளம் அளிக்கின்றனர்.

சென்ற மகா யுத்த முடிவுவரை ஐரோப்பியர்கட்குத் தாய்லந்தில் சில விசேஷச் சலுகைகள் அளிக்கப்பட்டு வந்தன. அவர்களை விசாரிப்பதற்கென்ற தனிக் கோர்ட்டுகள். ஜர்மானியருக்கும் ஆஸ்திரியர்கட்கும் அளிக்கப்பட்ட சலுகைகள் அவர்களது தோல்வியோடு நின்றன. சென்ற யுத்தத்தின்போது சையாமும் மேற்சொன்ன இரு தேசங்களுடன் போர் தொடுத்ததைப் பலர் மறந்திருக்கலாம். 1920-ல் அமெரிக்கா தானாகத் தனது விசேஷ உரிமைகளை விட்டுக் கொடுத்தது. அதைத் தொடர்ந்து பிரிட்டனும், 1927-க்குள் இதர ஐரோப்பிய நாடுகளும் தங்கள் சலுகைகளை விட்டுக்கொடுத்தன. தாய்லந்தில் சாதாரணமாக 1500 ஐரோப்பியர் இருக்கின்றனர். ஐரோப்பிய, முக்கியமாகப் பிரிட்டிஷ் எஞ்சினீயர்கள், வனப் பாதுகாப்பு நிபுணர்கள், தொழில் ஆலோசகர்கள் ஆகியோர் தாய்லந்தின் இயற்கை வளத்தை அபிவிருத்தி செய்வதில் அதிகம் உழைத்திருக்கின்றனர்; எனினும் அவர்கள் ஆட்சி முறையில் எவ்விதத்தும் தலையிட்டதில்லை. முற்றும் மன்னர் ஆட்சியே அங்கு சமீபகாலம் வரை நடந்து வந்தது.

வெள்ளையர்களுக்குத் தாய்லந்து சீதோஷ்ண நிலை பிடிப்பதில்லை. உஷ்ணம் அவ்வளவு ஏறிவிட்டாலும், குளிர் காலத்தில் சில சமயம் இரவில் 50 டிகிரி வரை இறங்கினாலும், காற்று எப்போதும் ஈரமாகவேயிருக்கும். பாங்காக்கில் மட்டும் வருஷத்தில் 50 அங்குல மழை பெய்கிறது.

நகரம், தேக்கு, அரிசி இவைதான் தாய்லந்தின் செல்வம். மலாய் நாட்டுக்கு சமீபமுள்ள பிரதேசத்திலிருந்து நகரம் வருகிறது. தேக்குக் கட்டைகள் வட பிரதேசக் காடுகளிலிருந்து ஆற்றுவழி பாங்காக்குக்கு கொண்டுவரப்படுகின்றன. ஒவ்வொரு வருஷமும் ஒரு லட்சம் கட்டைகளுக்கு மேல் மிதந்து வரும். 30,000 கட்டைகள் வரை மற்ற நதிகள் மூலம் பர்மாவுக்கும் இந்தோ சைனாவுக்கும் செல்லுகின்றன. மரங்களை உருட்டுவது, அப்புறப்படுத்துவது எல்லாம் அந்நாட்டில் யானைகளே செய்கின்றன. அந்நாட்டுத் தேசியக் கொடியை அலங்கரிக்கும் பிரசித்திப்பெற்ற "வெள்ளை யானைகள்" இப்போதெல்லாம் அதிர்ஷ்டத்திற்குரிய அறிகுறியாக மட்டுமே இருந்துவருகின்றன. அவை கிடைப்பது ரொம்ப அபூர்வம். 1927ல் வெள்ளை யானை யொன்று பிறந்தது. அதை மன்னருக்குப் பரிசளித்தார்கள்.

அரிசி தாய்லாந்துக்காரர்களின் பிரதம உணவு மட்டுமல்ல; அவர்களது ஏற்றுமதிப் பொருள்களில் அது மூன்றி விருபங்கைக் கொண்டதாகும். நதிப் பிரதேசத்திலுள்ள செழிப்பான நிலங்களில் செய் பயிராகிறது. உழுதல், நடுதல், அறுத்தல் எல்லாம் கையாலேயே செய்யப்படுகின்றன. சீர்திருத்தமான பாசன முறைகளை அமைக்க இந்தியாவிலிருந்து நிபுணர்கள் அனுப்பப்பட்டனர்; நவீன முறைகள் புகுத்தப்பட்டன. இதனால் பல லட்சக் கணக்கான ஏக்கர் விஸ்தீரணமுள்ள பூமி புதிதாகப் பயிரிடப்பட்டு வருகிறது. அங்கு எருமைகளே உழவுத்தொழிலுக்கு உபயோகமாகின்றன. விவசாயிகளிடம் 40 லட்சம் எருமைகளுக்குமேல் இருக்கின்றன.

பாங்காக்குக்கு வடக்கே 20மைல் தூரத்தில் டான் முவாங்கில் நல்ல விமான நிலைய மொன்றிருக்கிறது. தேசத்தின் வேறு பல இடங்களிலும் விமான மிறங்கும் இடங்களிருக்கின்றன. சுதேசிகள் விமான மோட்டுவதில் நல்ல தேர்ச்சி பெற்றிருக்கின்றனர்.

முன் காலத்தில் பல முறை தாய்லந்து எதிரிகளின் படையெடுப்புக்கு ஆளாகியிருக்கிறது. 14வது நூற்றாண்டில் அதற்கும் கம்போடியாவுக்கும் ஆரம்பமான போர் 400 வருட காலம் நடைபெற்றது. பர்மியர்களும் பல முறை படையெடுத்துச் சென்றிருக்கின்றனர். ஒரு முறை அவர்கள் போர்த்துகீசியர் உதவியால் தலைநகரான அயூத்தியாவைப் பிடித்தனர். ஆனால் பிராகாரத் என்ற வீரனால் அது மீட்கப்பட்டது. 18வது நூற்றாண்டில் அது மீண்டும் பிடிபட்டது. பயா டாக்ஸின் என்பவன் மீண்டும் மீட்டி பாங்காக்கில் தலைநகரை ஸ்தாபித்தான்.

### இந்திய—பர்மா ஒப்பந்தம்

#### திருத்த இந்திய சர்க்கார் சிபார்சு

நவம்பர் 17உ ராஜாங்க சபையின் கூட்டத்தில் ராஜா யுவராஜ தத்தரின் கேள்விக்குப் பதிலளிக்கையில் வெளிநாட்டு இந்தியர் இலாகாக் காரியதரிசி, "பர்மாவுக்குச் சரீர உழைப்பாளிகள் குடியேறுவது தடுக்கப்பட்டிருப்பது தவிர இந்திய-பர்மா ஒப்பந்தம் இன்னும் அமுலுக்கு வரவில்லை; ஒப்பந்தம் சம்பந்தமாக நாட்டில் ஏற்பட்டுள்ள ஆக்ஷேபங்களை யெல்லாம் இந்திய சர்க்கார் இந்தியாமந்திரிக்குத்தெரிவித்து, அமுலுக்குக் கொண்டு வருவதற்கு முன்பாக ஒப்பந்தத்தில் சில திருத்தங்கள் செய்ய வேண்டுமென்று யோசனை கூறியிருக்கின்றனர்" என்று தெரிவித்தார்.

## நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

O. S. No 165 of 1941

ராமன் செட்டியார் — வாதி

தற்காலம் சிலோனில் கண்டி டிஸ்டிரிக்ட்டு புசலாத் தோட்டத்திலிருக்கும் குரும்பலூர் அமாவாசியாகிய அழகன் மகன் சின்னப்பயல் என்ற அழகன். — 1-ம் பிரதிவாதி

1ம் பிரதிவாதி, வாதிக்கு 26-4-28உ யில் ரூ 300-க்கு யெழுதி ரிஜிஸ்டர் செய்து கொடுத்திருக்கிற ஈடுகடன் தெஸ்தவேசின் பேரில் ஷை துகையை வரப்பற்றுவதற்காக ஷை வாதி என்பவர் இவடம் கோர்ட்டில் வியாச்சியம் தாக்கல் செய்து 17-12-1941உ வாயிதா யேற்பட்டிருக்கிறது. அதைப் பற்றி 1ம் பிரதிவாதிக்கு யேதாவது ஆக்ஷேபணை யிருந்தால் அதை ஷை தேதியில் இவடம் கோர்ட்டு முன் பகல் 10 மணிக்கு நேரிலாவது வக்கீல் மூலமாயாவது ஆஜராகி அறிவித்துக் கொள்ளவும். அப்படி தாங்கள் ஆஜராகத் தவறினால் தாங்கள் இல்லாமலே ஷை வியாச்சியம் விசாரித்து தீர்மானிக்கப்படு மென்பதை இதன் மூலம் தெரிவித்திருக்கிறது.

P. A. சுப்பிரமணிய அய்யர், வக்கீல்
சிவகெங்கை 22-11-1941



## நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

O. S. No 194 of 36
I. A. No 839 of 40

பெரி. வெ. ஆறுமுகம் செட்டியார் — வாதி

(1) அளகன்
(2) வீரன்
(3) கருப்பன்
(4) கிழவன்
(5) திம்மாச்சி என்ற சின்னப்பயல்
(6) கருப்பன் என்ற விசுக்கு
— 1 to 4, 7 & 8 பிரதிவாதிகள்.

இந்த நிம்பர் பிரலிமெனரி டிக்கிரியை ஸ்திரப்படுத்தி பைனல் டிக்கிரி Pass செய்ய வேணுமென்று வாதி மனுக் கொடுத்து ஷை மனுவும் 5—12—41உ-க்கு வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபனை யுண்டானால் அன்று பகல் 11 மணிக்கு கோர்ட்டில் ஆஜராகி தெரியப்படுத்திக்கொள்ளவும். தவறினால் எக்ஸ்பார்ட்டியாக பைசல் செய்யப்படும்.

பி. என். நடராஜன், வக்கீல்.
சிவகெங்கை, 22-11-41.

Bleed through

## WALTER PATER'S ESSAY ON STYLE.

# வால்டர் பேடரும் வசன நடையும்

(திரு. வி. ஆர். எம். செட்டியார் பி.ஏ.)

(சென்ற வாரத் தொடர்ச்சி)

சிறு சொற் கூட்டங்களும், நீண்ட சொல்லேயும் சேர்ந்தால், பாஷை நிறைந்து உண்மை ஒலிக்கின்றது; சாக்ஸன் (Saxon) சிறு சொல்லும், லாடின் (Latin) நீண்ட சொல்லும் கலந்தால், நடை உயர்ந்து மலர்ந்து உருவடையும். கருத்தும் சொல்லும் கவ்வுமாறு, நடையை சிருஷ்டியில் பூட்டவேண்டும்; இரண்டுக்கும் மத்தியில், அதிக வெளியிருந்தால், எண்ணம் உருக்குலேந்து விடும். 'சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல்'—என்பதே உண்மை நடை. எண்ணச் சிதைவில்லாமல், சொற் சோர் வில்லாமல், நடையைத் தோற்றுவிக்க வேண்டும். தன்னடக்கம், சொல்லடக்கம், நடைக்கு ஒரு அழகைக் கொடுக்கின்றன; அதுவே உண்மைச் சிகரம், அழகின் வெற்றி.

வெளியுலகச் சந்தையினின்றும், தன் மர்ம நடையில் சாந்தியடைய மறைவதற்கு முயலுவான் நூல் வல்லோன். அதுவே தனிமையின் இனிமை, தனிமையின் உள் வெற்றி ஜோதிச் சக்கம். மில்டனின் காவியம் (Lycidas), தாக்கரேயின் எஸ்மண்ட் (Esmond) நாவல், நியூமன் சர்வகலாசாலையின் கருத்து (Idea of a University)—இந்நூல் நிலயங்களில் அந்நூற்பெரியார்கள் தேடுவதும் தனிமையின் இனிமையே! சொல்லோவியம் அமையும் போது, வீண் சொற்கள் குவியாமல், நடையின் கட்டிடத் தேவையின் ஒவ்வொரு சிறுபாக அமைதிக்கும் அவசியமாய் நிற்கும் இன்றியமையாத உண்மைச் சொற்களே தங்கி, நெருங்கி உரம் பெறுகின்றன; மேற் சொற்கள் வேண்டாதவையே. ஷில்லர் சொல்லுவதுபோல், எதை வேண்டா மென்று ஒதுக்குகிறனே, அதனின்றே ஒரு ஓவியக்காரனின் ரகஸ்யப் பயிற்சி புலனுகின்றது. தொட்டெழுதுவதைத் தொட்டெழுதி, விட்டெழுதுவதை விட்டெழுதினுல், அவன் ஓவியப் புலமை விடக்தமாகத் தெரிகிறது; உண்மை உள்ளிருந்து ஒளிவிடுகிறது. பயனற்ற சொற்கள் பயனற்ற எண்ணங்களைப் புகுத்தும்; அலங்கார ஜடைத் தொங்கல்கள் எல்லாம், உண்மையைக் குறைக்கும், உண்மையை மறைக்கும், உண்மையைச் சிதைக்கும். (Flaubert) பிளாபர்ட் எழுதிய "Madame Bovery," ஸ்டெண்டால் (Stendhal எழுதிய "Le Rouge et Le Noir" போன்ற நூல்களில் தேவையற்ற அலங்காரத் தொங்கல்கள் கிடையா. அவசியத்தையும் உபயோகத்தையும் உள்ளுணர்ந்தே நல்ல நூல்களின் நடை உதயமாகும். சொற்குப்பை வளராது ஒழியும். அழகையும் உண்மையையும் நுட்பமாய் விளக்கும் சொற்சிகரங்களே வளர்ந்து மின்னும். கலேயின் விநோதம் இதுவே. கல் செதுக்கிப் பட்டையடிப்பவன், ஆரம்பத்தில் காடுமுடான நிலேயிலுள்ள கற்குகையினின்று, கடைசியாகத் துளேத்த தூசியை ஊதி விளக்கும் வரை, கலேயின் வளர்ச்சியில் ஈடுபட்டு வளர்கின்றன். இருண்ட கற்குகையினின்று கலேயின் ஜோதி உதயமாகின்றது என்று மைகேல் ஏஞ்ஜலோ (Michel Angelo) அனுபவித்து அந்த ஆத்ம உணர்ச்சியை விமர்சனம் செய்கின்ருர். கற்பாறையின் அடிவேரின் வர்ண ஜொலிப்புப் போல், சொற்பாறையிலும் அடிவேர் வரை அழகு ததும்பி ஜொலிக்கின்றது; ஆனல் அது சிற்பியின் அகக்கண்ணுக்கே புலப்படும். நூல் வல்லோனின் பேனு முனேயில், சொல்லின் அழகுச்சுமை வந்துகுவியும். உண்மை நிறைந்த சொல்லணியையே கவனித்து அவன் பருகி விரிப்பான்; சோம்பற் சொற் கூட்டம் அவன் பேனு முனேக்கு அணுகவே அணுகாது. பாஷைக்குப் பிறவியில் ஏற்பட்ட உள்ளழகும், உள்ளணியும் அறிவில் ஊறிய பண்டிதருக்குச் சலபமாய்ப் புலனுகும்.

புஷ்பங்களுக்கு, அழகும் ரூபமும் தோன்றும்போதே விளைவதுபோல, பாஷைக்கும் தோன்றும்போது சில அழகச்சங்கள் உண்டாகின்றன. நல்ல மொழி நடைக்கு இந்தக் கல்வி மணமும் அவசியமே யாகும். கலேயில் தோய்ந்தவன் அதிகச் சொல்லே விரும்பான்; கட்டிடச் சிற்பிபோல், துவக்கும்போதே முடிவின் அழகையும் அவசியத்தையும் நன்கு ஆராய்ந்து தீர்மானிப்பான்; பின்னேவியப் பூர்த்தியும், முற்கட்டில் நகர்ந்து கொள்ளுவான். வாக்கியத் துவக்கத்திலே முடிவின் லட்சியத்தை, வாக்கியக் கட்டின் ஒவ்வொரு பாகத்திலும் மறவாது பார்த்துச் சிறக்க உறுதி செய்வான். அதுவே மொழியின் மன வளர்ச்சியாக, ஊறி வளர்வதாகும். ஒரு நுட்பமான வேதாந்தி டீன் மான்சல் (Dean Mansel) என்பவர் இலக்கியச் சிறப்புடன், உருக்கமான நெருங்கிய அழகிய நடையில், மன ஒருமையை விளக்கும் ஓவிய நடையை எழுதிக்காட்டி வெற்றி பெற்றிருக்கின்ருர். சொல்லும் கருத்தும் செவ்வனே மனப்பற்ருேடு இணைக்கப்பட்ட சித்திரம் என்பதை நடையழகில் முழுமொழியில் நிருபித்திருக்கின்ருர். சொல், வாக்கியம், முழு வியாசம், பாட்டின் பூர்த்தி—இதை நாடி ஒவ்வொரு அம்சமும் நிறைவேற்றப்பட்ட நடையையே, நடையழகு என்று கருதலாம்.

நடைக்கு ஜீவிய வாசனை வேண்டும்; உடையாது வளரும் ஜீவிய மொழி ஜோதி வேண்டும். நீண்ட பின்னப்பட்ட வாக்கியத்துடன், சிறு சூடான வாக்கியமும் கலந்து, நடையழகைப் போற்றக்கூடும்; சிறு வாக்கியமே, குழந்தையின் தேவையைச் சுட்டிக்காட்டும் சக்தி வாய்ந்தது. ஒரு சிறு சொல்லின் விளக்கமாய்ப் பூர்த்தியாகும் நீண்ட வாக்கியமும் அழகு வாய்ந்ததே. எண்ணச்சுடரை எடுத்துக்காட்டும் சுத்தமான சொற்ருெடரைச் சுத்தப் படுத்திப் பயன்படுத்திக் கொள்ளுவதே, இலக்கிய நடையின் ஓவியச் சிகரமாகும். சொல்லேத் துடைத்துக் கருத்தை மொழியில் உண்மை விளங்க அலங்கரிக்க வேண்டும். சுத்தமான நடையிலும் இயற்கை இல்லம் கட்டிய ஆசிரியன், நூலின் உண்மையை மிக நுட்பமாக விளக்கிக் காட்டி நிற்கின்ருன். மொழிப் பயிற்சியே, காவிய ஓவியக் கட்டிடப் பயிற்சியாகும். கற்பனேக் கட்டிடமே காவியக் கட்டிடம்; அதுவே மொழி அரண்; சொற்சிகரமே காவியச் சிகரம்.

மொழியின் சாயலில், மனமும் ஆத்மாவும் கலந்து பரவுகின்றன. மனமேற்ற முன்ன காலத்தில், (Blake) பிளேக் என்ற கவி, ஆத்ம விமர்சனக் கவியை எழுதிப் போந்தான். சந்தப் பிரளயத்தில், ஆத்மச் சொல் அரும்பி மலர்கின்றது. அதுவே உடன் பிறந்த உள்ளுணர்ச்சிச் சொல்லாகும். பிறரின் ஊனக் கண்ணுக்குக் காரணம் புலனுவதில்லே; கவியின் அகக்கண்ணுக்கு, ஆத்ம விமர்சனம் சொல்லலையைக் காட்டுகின்றது; மத சம்பந்தமான பிரசங்க வெள்ளத்திலும், ஆத்மச் சொல் பிறந்து புலனுகின்றது; அதுவே சந்த விமர்சனம், உள்ளொளியின் தெளிவு, ஞான ஊற்றின் பெருக்கு. ஆத்மச் சொற்களில் ஒரு மின்சார ஓர்மை மிளிர்கின்றது. (Bible) பைபிளிலும், வேதப் புத்தகங்களிலும், ஆத்ம அலேகளின் விமர்சனச் சொற்களே ஒளி வீசுகின்றன; இதுவே சுடர் நடை. கலே விளக்கத்தில், இலக்கிய வளர்ச்சியின் ஆத்ம பிம்பத்தை அறிவோர் சிலரேயாவர்.

இலக்கிய வளர்ச்சியில் தியாக மூர்த்தியாக விளங்குகிறர், கஸ்டேவ் பிளாபர்ட் (Gustave Flaubert) என்பவர். இருபத்தைந்தாவது வயதில் அவர் ஒரு பெண்ணுக்கு எழுதிய கடிதத்தில் ஆத்ம இலக்கிய விரிவையே வற்புறுத்துகின்ருர். இலக்கிய அழகில் இன்பங் குளிப்பதே, சிறந்த ஆனந்தம் என்கின்ருர். அவரைப் பற்றி மற்ருெரு நண்பர் எழுதுவதில், சில மொழி ரகஸ்யங்களே அவர் எப்படிப் பெற முயல்கிருர் என்பதைப்பற்றி வர்ணிக்கிருர்: பிளாபர்டு என்பவர் விடா முயற்சியால், நிகரற்ற சொற் சிகரத்தையே நாடி யுழைக்கின்ருர்; ஓர் ஒப்பற்ற தனி அழகு நிறைந்த பரிபூரணச் சொல்லேயே தேடியலேந்து அடைகின்ருர். முயற்சியின் முதிர்ச்சியால், தன் ஆத்ம மோனத்தில் உண்மைச் சொல்லேப் பற்றிப்பிடிக்கின்ருர். ஓர் கருத்துக்கு ஓர் சொல், ஒப்பற்ற ஒரே வார்த்தை— இதுவே நடையின்

(12-ம் பக்கம் பார்க்க)





## இந்தோ சீனவில் இந்தியர் ஐவேஜிகள்

### வெளிநாட்டிலாகா காரியதரிசியிடம் தூது

பிரெஞ்சு—இந்தோ சீனவிலுள்ள இந்தியர்களது ஐவேஜிகளைத் தேக்கிவிட்டதன் பயனுக அங்குள்ள இந்தியர்படும் அவதியை சர்க்காருக்குத் தெரிவிப்பதன் பொருட்டு ஜனுப் புதுஷா (ராஜாங்க சபை மெம்பர்) ஸ்ரீ வீ. நாடிமுத்துப் பிள்ளே (சென்னே அசெம்பிளி மெம்பர்) ஜனுப் ஜே. இஸ்மேல் (கூத்தநல்லூர் மிராசுதார்) ஆகியோர்களைக் கொண்ட தூதுக்கோஷ்டி இந்திய வெளிநாட்டிலாகா காரியதரிசியைக் கண்டுபேசியது. தூது கோஷ்டியினர் தெரிவித்ததாவது:—

"பிரெஞ்சு பாங்கிகள் வழியாக இந்தியாவுக்குக் கொண்டுவரப்பட்ட 10000 ரூபாய் இந்தியாவிலுள்ள பிரெஞ்சு ஸெட்டில்மெண்டுகளிலிருப்பவர்களுக்கே பெரும்பாலும் உபயோகப்பட்டது. பிரெஞ்சு-இந்தோ சீனவிலுள்ள இந்தியர் இதனுல் பலனடைய முடியவில்லே. இந்தியாவில் பிரெஞ்சு ஸெட்டில்மெண்டுகளுக்கு வெளியேயுள்ள இந்தியர் இந்தோ-சீனவிலிருந்து பணத்தைப் பெறும் வகையில் கட்டுப்பாடு விதிகள் தளர்த்தப்பட வேண்டும். பிரெஞ்சு-இந்தோ சீனவிலுள்ள சொத்துக்களைப் போய்ப் பார்க்க இஷ்டப்படும் இந்தியருக்கு பிரயாணச் சீட்டுகள் அளிக்கவேண்டும். பிரிட்டிஷ் சர்க்கார் தேக்கியிருக்கும் பிரெஞ்சுப் பணம் இந்தியருக்கும் பிரயோசனப்படும்படி செய்ய வேண்டும். பிரெஞ்சு-இந்தியாவில் இந்தியர்களுக்கிருக்கும் சொத்துக்கு சமானமான பிரெஞ்சு செல்வாதாரங்களே இந்தியருக்கு வாங்கித்தரவேண்டும்.'

## சென்னே பொதுவுடமைச் சதி வழக்கில் தீர்ப்பு

### ஸ்ரீ சுப்பராயன் குமாரருக்கு 3½ வருடக் கடுங்காவல்

சென்னேப் பொதவுடமைச் சதி வழக்கின் தீர்ப்பு நவம்பர் 19-ந்தேதி சென்னே 2-வது பிரெஸிடென்ஸி மாஜிஸ்திரேட்டால் கூறப்பட்டது. ஸ்ரீ எஸ். மோகன் குமாரமங்கலத்துக்கு (டாக்டர் சுப்பராயனின் புதல்வர்) மொத்தம் 3½ வருஷக் கடுங்காவல் தண்டனேயும் ரூ 500 அபராதமும், அபராதம் செலுத்தத் தவறினுல் இன்னும் 6 மாதத் தண்டனேயும்; ஸ்ரீமான்கள் பி. ராமமூர்த்திக்கு 4 வருஷம், சுப்பிரமண்ய சர்மாவுக்கு 3½ வருஷம், ஹனுமந்தராவுக்கு 3 வருஷம், மீகாளீயனுக்கு 3 வருஷம், வி. எஸ். சுப்ரமண்யத்துக்கு 3 வருஷம், உமாநாதராவுக்கு 2½ வருஷம் வீதம் கடுங்காவல் தண்டனேகள் விதிக்கப்பட்டன, ஸ்ரீ குமாரமங்கலம், ஸ்ரீ வி. எஸ். சுப்ரமண்யம் இருவருக்கும் 'ஏ' வகுப்பு; ஸ்ரீ சுப்ரமண்ய சர்மாவுக்கு 'பி' வகுப்பு; மற்றவர்களுக்கு வகுப்பு நிர்ணயிக்கப்படவில்லே.

தீர்ப்புக் கூறப்பட்டபோது கோர்ட்டில் ஏராளமான கூட்டம் கூடியிருந்தது. டாக்டர் சுப்பராயனும் அவரது மனேவியாரும் வந்திருந்தனர்.

### ஸ்ரீ ஹனுமந்தராவ் தப்பியோடிவிட்டார்

சென்னே பொதுவுடமைச் சதி வழக்குக் கைதிகளில் ஒருவரான ஸ்ரீ ஹனுமந்தராவ், மேற்படிக் கைதிகளே பெல்லாரிக்கு இட்டுச் செல்லுகையில் ரயில் வண்டி தாட்டப்பத்திரிக்கும் குண்டக்கல்லுக்குமிடையே ஓடிக்கொண்டிருக்கும்போது 21-ந் தேதி வெள்ளிக்கிழமை விடியற்காலே 3 மணிக்கு ரயிலிலிருந்து குதித்துத் தப்பியோடிவிட்டதாகத் தெரிகிறது.

### இராமநாதபுரம் ஜில்லா மருத்துவ வாலிப சங்கம்

19—11—41-ல் பள்ளத்தூர் சந்தைப் பேட்டை ஊரணிக்கரையில் ஷை சங்கத் தினுதாவில் கூட்டம் நடைபெற்றது. ஷையூர் மருத்துவர்கள் அங்கத்தினர்களாய்ச் சேர்ந்து ஆதரிக்க வேணுமென்று சங்கத்தின் சார்பில் கேட்டுக்கொண்டு கூட்டம் முடிந்தது.

## இந்தியாவில் குண்டு வீச முடியுமா?

### ராஜாங்க சபையில் கேள்வி

ராஜாங்க சபைக் கூட்டத்தில் ராணுவ இலாகாக் காரியதரிசி ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில், இந்தியாமீது அச்சு நாடுகள் குண்டு வீச வேண்டுமானுல் அவை தங்கள் விமான தளத்திலிருந்து 1840மைல் தூரத்துக்குப் பறந்து வரவேண்டுமென்றும், அச்சு நாடுகளின் யுத்த விமானங்கள் 2500 மைல் தூரம் ஒரேயடியாகப் பறக்கமுடியுமென்றும், ஜப்பானிய விமான தளத்திலிருந்து கல்கத்தாவுக்கு 950 மைல் தூர மிருப்பதாகவும், அச்சுநாடுகளின் விமான தளத்திலிருந்து பம்பாய் 2690 மைலும், டில்லிக்கு 2350 மைல் தூரம் இருப்பதாகவும் கூறினர்.

### பத்திரிகைகளின் விலேயை நிர்ணயித்தல்

#### இந்திய சர்க்கார் யோசனே

பத்திரிகைகளின் அளவைப் பொறுத்தே அவற்றின் விலேகளே நிர்ணயிக்கும் விஷயத்தைப்பற்றி இப்பொழுது இந்திய சர்க்கார் யோசித்து வருகின்றனர். இப்பிரச்னே சம்பந்தமாக இந்திய-கீழ் திசை பத்திரிகைக்காரர்கள் சங்கத்தினர் இம்மாதம் 5-ந்தேதி சர்க்காருக்குச் சில யோசனேகளை வெளியிட்டனர். பத்திரிகைக் காகித இறக்குமதிக்காரர்களும் அவசரமாக ஆர்டர்கள் அனுப்பவேண்டி யிருக்கிறதென்று பலர் கூறுவதால் 1940-ம் வருஷத்தில் உபயோகிக்கப்பட்ட மொத்த காகித அளவில் 100 க்கு 75 வீதத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு 6 மாதங்களுக்குக் காகித அளவை அநுமதிக்க முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அதற்கிடையே பத்திரிகைக் காரியாலயங்களிலிருந்து காகித உபயோக அளவு சம்பந்தமாகக் கிடைத்துள்ள புள்ளி விவரங்கள் சரிபார்க்கப்பட்டு வருகின்றன என்று சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

### ஹிந்துஸ்தான் சாரண சங்கம், கல்லல்

24-11-41 காலே 7 மணிக்கு "ஹிந்துஸ்தான் சாரண சங்கம்—தாகூர் குரூப்" என்ற பெயரால் சாரண சங்கம் ஒன்று ராமனுதபுரம் ஜில்லா ஹிந்துஸ்தான் சாரண சங்கக் காரியதரிசி தலைமையில் திறந்து வைக்கப் பெற்றது. "சாரண சங்கம்" எனும் பொருள்பற்றித் தலைவர் அவர்களும் தேவகோட்டை ஸ்ரீ நாகப்ப செட்டியார் அவர்களும் சொற்பெருக்காற்றினர். குரூப் காரியதரிசி நன்றி கூறக் கூட்டம் நிறைவேறியது.

## லஞ்சம் வாங்கியதாக

### சப் இன்ஸ்பெக்டருக்குத் தண்டனே

சென்ன கோட்டப்பள்ளி போலீஸ் ஸ்டேஷனேச் சேர்ந்த சப் இன்ஸ்பெக்டர் ஸ்ரீ வாசுதேவராவும், ஹெட் கான்ஸ்டபிள் அப்துல் காதரும் லஞ்சம் வாங்கியதாகவும், சட்ட விரோதமாகச் சிலரை அடைத்து வைத்ததாகவும் ஏற்பட்ட வழக்கில் அனந்தப்பூர் செஷன்ஸ் ஜட்ஜ் ஸ்ரீ பி.என். ராமசுவாமி முதல் எதிரிக்கு மோதக்கடுங்காவலும், 75 ரூ அபராதமும், 2-வது எதிரிக்கு ஒரு மாதக் கடுங்காவலும் விதித்திருக்கிருர்.

### ஜீவஹிம்சை நிவாரணச் சங்கம் காரைக்குடி

ஷை சங்கத்தின் கமிட்டி மீட்டிங் 17-11-41ல் காரைக்குடி பெஞ்சுக் கோர்ட் கட்டிடத்தில் உபதலைவர் ஸ்ரீ சி. மு. அரு. நாராயணன் செட்டியார் அவர்கள் தலைமையில் மாலே 5 மணிக்கு நடைபெற்றது. கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின:

நமது சங்கத்தின் போஷகரான டாக்டர் சனம் ராஜா சர் அண்ணுமலேச் செட்டியார் அவர்களின் 60வது ஆண்டு பூர்த்தி விழா நடத்தற்கு சந்தோஷப்படுவதாயும், எல்லாம் வல்ல இறைவன், டாக்டர் ராஜா சர் அவர்களுக்கு தீர்க்க ஆயுளும் திடகாத்திரமும் அளிக்க வேணுமாயும் இச்சங்கம் கடவுளேப் பிரார்த்திக்கின்றது. இதை வைஸ் பிரஸிடெண்ட் திரு. சி. மு. அரு. நாராயணன் செட்டியார் பிரேரேபிக்க, மற்ருெரு வைஸ்பிரஸிடெண்ட் திரு மெ. செ. அ. மெ. பழனியப்ப செட்டியார் ஆமோதிக்க ஏகமனதாக நிறைவேறியது.

மிருகவாரக் கொண்டாட்டத்தை 1942 ஜனவரி மாதத்தில் நடத்தவதெனத் தீர்மானிக்கப்பட்டது. கீழ்க்கண்டவர்கள் அடங்கிய கமிட்டி அதற்கு நியமிக்கப்பட்டது:-ஸ்ரீமான்கள் சி. மு. அரு. நாராயணன் செட்டியார், மெ. செ. அ.மெ. பழனியப்ப செட்டியார், N. ராசகோபாலன், சித. க. கதிரேசன் செட்டியார், டாக்டர் கே. கோவிந்தராஜுலு, டாக்டர் சாரி (செக்ரெட்டரி) ராம. மு. நா. ராமனுதன் செட்டியார் சி. முரு. நாராயணன் செட்டியார் (முனிசிபல் சேர்மன்), நடராசன் ஹெல்த் ஆபீசர், அ. கோபாலகிருஷ்ணன் கமிஷனர்.

கவர்ன்மெண்டு கிராண்டு ரூ. 307—12—0 சங்கத்துக்குக் கொடுக்கப்பட்டு அதை வாங்கிய கடிதம் படித்து ரிக்கார்டு செய்யப்பட்டது.

## தங்கக் கட்டிகள் கைப்பற்றப்பட்டன

### ரங்கூனில் இந்தியப் பிரயாணிகள் கைது

இந்தியாவிலிருந்து கப்பலில் பிரயாணம் செய்த ரங்கூன் சேர்ந்த இரண்டு பிரயாணிகளிடமிருந்து சுமார் 130 தோலா எடையுள்ள தங்கக் கட்டிகளும், 51 சவரன்களும் கைப்பற்றப்பட்டன. மாண்டலே ரயிலிலிருந்து இந்தியப் பிரயாணி ஒருவரிடமிருந்து சீனப் போலீஸார் ரூபா 23,400 பெறுமான சீனக் கரன்ஸி நோட்டுகளேக் கைப்பற்றியதாகத் தெரிகிறது.

### எட்டுகுடி தேவஸ்தான வழக்கு

#### டிரஸ்டி மனு தள்ளுபடி

நாகபட்டினத்திலிருக்கும் எட்டுகுடி தேவஸ்தானத்தை இந்துமத பரிபாலனச் சட்டத்தின் கீழ் கொண்டு வருவதற்காக, சென்னே தேவஸ்தான போர்டார் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் சட்ட விரோதமானவை யென்றும், செல்லுபடியாகத்தக்கவை யன்று என்றும், எனவே நடவடிக்கை யெடுக்கா திருக்கும்படி தடுக்குமாறு போர்டுக் கமிஷனர் மீது தடை உத்தரவு பிறப்பிக்க வேண்டுமென்றும் எட்டுகுடி தேவஸ்தான டிரஸ்டி ஹைகோர்ட்டில் தொடர்ந்திருந்த வழக்கில், தேவஸ்தான போர்டாரின் நடவடிக்கைகள் சரியானவை தான் என்று குறிப்பிட்டு ஜட்ஜ் வழக்கைத் தள்ளுபடி செய்து விட்டார்.

### இன்ஷூரன்ஸ் கம்பெனியை ஏமாற்றியதாக

#### வங்காளத்தில் ருசிகரமான வழக்கு

கல்கத்தாவில் ருசிகரமான ஒரு இன்ஷூரன்ஸ் ஏமாற்று கேஸ் நடைபெறுகிறதாம். தேவேந்திர பிஜாய் சன்யால், குமுத் பந்துகார் இன்னும் சிலர் ரூ 5000க்கு, மூன்று இன்ஷூரன்ஸ் கம்பெனிகளே ஏமாற்றிச் சதி செய்ததற்கு உடந்தையாக விருந்தார்களென்று குற்றம் சாட்டப்பட்டிருக்கின்றனர். பிராஸிகூஷன் தரப்பிலே சொல்லப்பட்டதாவது:— ஹீராலால் டே என்பவருக்கு பரோடா காந்த தத்தர் என்ற பொய்ப் பெயர் சூட்டி அவர் ஆயுளே இன்ஷூரன்ஸ் செய்ய டாக்டர் பரிசோதனே செய்யப்பட்டது. ஒன்றிரண்டு தவணைப் பணம் கட்டிய பிறகு பரோடா காந்த தத்தர் இறந்து விட்டதாக அவர் சார்பில் பணம் பெறுவதற்காக மனுச் செய்யப்பட்டது. இது சம்பந்தமான விசாரணையில் கம்பெனியார் இறங்கவே, பரோடா காந்த தத்தர் என்று உண்மையிலே பெயர் கொண்டவன் ஒரு ஏழைக் கிழப் பிச்சைக்காரன் என்றும், அவன் இன்ஷூர் செய்ததில்லே யென்றும், அவனுக்குக் குழந்தைகள் ஒன்றுமில்லே என்றும் தெரியவந்தது.

ஹீராலால் டேக்கு 45 வயது என்று குறிப்பிடப்பட்டிருந்தது; ஆனுல் பரோடா காந்த தத்தர் என்ற அந்தப் பிச்சைக்காரனுக்கு அப்போது 70 வயதாகி யிருந்ததாம்.

### பாகனேரியில் தமிழிசைக் கூட்டம்

பாகனேரி பெருமாள் கோவில் மண்டபத்தில் 20-11-41 மாலே 3-30 மணிக்கு திரு. சி. உ. சுப. உடையப்பா அவர்கள் தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஏராளமான மக்கள் வந்திருந்தனர். அவ்வமயம் பல அன்பர்கள் தமிழிசை இயக்கத்தை ஆதரித்தும், ராஜா ஸர் அவர்கள் தமிழிசை இயக்கத்துக்கு அளித்துவரும் உதவியைப் போற்றியும் தேவகோட்டை மாகாட்டுத் தீர்மானங்களே ஆதரித்தும், அரியக்குடி இராமானுஜ ஐயங்காரின் அறிக்கையைக் கண்டித்தும் சொற்பொழிவாற்றினர்கள். அத்துடன் இடையிடையே இசைவாணர்கள் சிறந்த இன்னிசைக் கருவிகளுடன் தனித் தமிழ் விருந்தளித்தார்கள். பிறகு காரியதரிசி நன்றிகூற இரவு 8 மணிக்குக் கூட்டம் இனிது நிறைவேறியது.

### கொழும்பில் வேலே நிறுத்தம்

கொழும்புத் துறைமுகத் தொழிலாளர் சுமார் 1500 பேர் சமீபத்தில் வேலே நிறுத்தம் செய்து விட்டனர். இது சம்பந்தமாக நால்வர் கைதுசெய்யப்பட்டிருக்கின்றனர்.

## செட்டியார் B. A. தேவை.

வெளிநாட்டிலுள்ள நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கம் ஒன்றுக்கு மானேஜர் ஸ்தானத்திற்கு பி. ஏ. பரீக்ஷை தேறிய ஒரு செட்டியார் தேவை.

ஆசிரியர், 'குமரன்', காரைக்குடி.

குமரன்

காரைக்குடி
விஷு-ஞூ கார்த்திகை-மீ 12௳

## விலைவாசிகள் கட்டுப்பாடு

யுத்தம் ஆரம்பமாவதற்குரிய அறிகுறிகள் தோன்றியவுடனேயே பெரிய வியாபாரிகள் மிகுந்த ஜாக்கிரதையுடன் நடந்து கொண்டனர். முடிந்த மட்டும், பணமுள்ளவர்கள் மூலாதாரமான பண்டங்களை யெல்லாம் சேமித்து வைக்கத் தொடங்கினர். வெளி நாட்டுப் பொருள்களுக்கு மட்டுமன்றி, உள்நாட்டு உற்பத்திப் பொருள்களுக்கும் கிராக்கி அதிகமாயிற்று. இதன் பயனாக, விலைவாசிகள் நாளுக்கு நாள் ஏறத் தொடங்கின. வேண்டிய மட்டும் பொருள்கள் பண்டசாலைகளில் தேங்கிக் கிடந்தும், மார்க்கட்டுகளில் கிராக்கி தான் ஏற்பட்டது. பொது ஜனங்களிடையே யுத்த பீதியை முக்கியமாக இந்த விலைவாசிகளே அதிகமாகப் பரப்பக் காரணமாயிருந்தன என்று சொல்லலாம். இவ்வித நிலைமை ஏற்படாதிருக்கத் தக்கபடி சர்க்கார் நடவடிக்கைகள் உடனே எடுக்க வேண்டு மென்று கோரப்பட்டது. இதன் பலனாகத் தாலூகாக்கள் தோறும் விலைவாசிகளை நிர்ணயிப்பதற்காகச் சர்க்கார் கமிட்டிகளை நியமித்தனர். இவர்கள் மாதமொரு முறை கூடி, அந்தந்தப் பகுதியில் பொருள்கள் இன்னின்ன விலைக்கு விற்கப்பட வேண்டு மென்று நிர்ணயிக்கிறார்கள். இந்த விலை அட்டவணைகள் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படுகின்றன. ஆனால், கடைகளில் கமிட்டியார் நிர்ணயிக்கும் விலை விகிதத்துக்குப் பண்டங்கள் கிடைக்கின்றனவா என்று பார்த்தால், அவ்வாறு கிடைப்பதாகத் தெரியவில்லை. கடை விலைக்கும் கமிட்டியார் நிர்ணயிக்கும் விலைக்கும், சில முக்கியமான பொருள்களுக்கு அதிக வித்தியாச மிருப்பதாகச் சொல்லப்படுகிறது. பொது ஜனங்கள் வீணுக் கஷ்ட நஷ்டப்படக் கூடாதென்று சர்க்கார் ஏற்படுத்தி யிருக்கும் இத்திட்டம் நடைமுறையில் பலனளிக்கா விட்டால், அது பலனளிக்கும்படி தக்கவாறு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டியது சர்க்கார் கடமையாகும்.

வெளிநாடுகளிலிருந்து வரவேண்டிய சாமான்கள், யுத்த நெருக்கடியால் போதுமான அளவு வந்து சேரவில்லை. அத்தகைய சாமான்களுக்கு விலையேறுவதும் இயற்கைதான். ஆனால், இந்நாட்டிலே உற்பத்தியாகும் உணவுப் பண்டங்களுக்கு நூற்றுக்கு 15 முதல் 30 விகிதத்துக்கு மேல்வரையும் விலைவாசிகள் ஏறியது பெரிதும் வருந்தத்தக்க காரியமாகும். இன்னும் இப்படியே ஏறிக் கொண்டிருக்கும்படி விட்டு வைத்தால், நாட்டில் தொழிலாளிகளும் ஏழைகளும் பெருங் கஷ்டத்திற்குள்ளாவார்கள் என்பதில் ஐயமில்லை.

இந் நிலைமையைப் பரிசீலனை செய்வதற்காகச் சென்னையில் மேயர் ஒரு மகாநாடு கூட்டினார். விலைவாசிகள் கட்டுப்பாடு சம்பந்தமாகச் சர்க்கார் எவ்வித நடவடிக்கையை மேற்கொள்ள வேண்டுமென்று அம் மகாநாட்டார் முடிவுக்கு வந்திருக்கின்றனர். விலை நிர்ணயக் கமிட்டியார் நிர்ணயிக்கும் விலை ஜாபிதாவைக் கடைகளில் தொங்களிடும்படி செய்ய வேண்டுமென்றும், அதில் குறிப்பிட்டுள்ள விலைப்படி சரக்குகள் விற்கப்படாவிட்டால் போலீசுக்குத் தெரியப்படுத்தித் தக்கவாறு நடவடிக்கை யெடுக்க வேண்டுமென்றும் அத்தீர்மானம் சிபார்சு செய்கிறது.

கமிட்டியார் நிர்ணயிக்கும் விலைக்கு அதிகமாகப் பொதுஜனங்கள் கொடுத்து ஏமாந்து போகாதிருக்கும்படி தடுக்க இதுவே சிறந்த வழியாகு மென்பதில் ஐயமில்லை. ஒருவர் காரண மில்லாமல் அமிதமாக விலை வாசிகளை உயர்த்தி விற்கும் பட்சத்தில், பாதுகாப்புச் சட்டப்படி அவர்மீது சர்க்கார் நடவடிக்கை யெடுக்கவும், மூன்று வருஷம் வரைக் கடுங்காவல் தண்டனை விதிக்கவும் இடமிருப்பதாகத் தெரிகிறது. இது உண்மையானால், மேற் கண்ட மகாநாட்டுத் தீர்மானப்படி நடவடிக்கை யெடுப்பது நல்ல பலனளிக்குமென்பது நிச்சயம்.

விலை நிர்ணயக் கமிட்டியார் வெளியிடும் ஜாபிதாவில் சில சமயம் சில ரகச் சரக்குகள் மார்க்கட்டில் இல்லை யென்று குறிப்பிடப்படுவதைக் காணலாம். இதன் உண்மையான காரணத்தையும் அதிகாரிகள் விசாரித்தறிய வேண்டும். இவற்றில் நெல்லூர், ரங்கூன் அரிசி வகைகள் முக்கியமென்றும், சில சமயம் மார்க்கட்டில் இல்லை என்று சொல்வதற்குக் காரணம், சிலர் அவற்றை வெளிக்குக் கொண்டு வராமல் விலையை ஏற்றும் நோக்கத்துடன் சேமித்து வைப்பதா னென்றும், இதைத் தடுக்க அதிகாரிகள் முயற்சிக்க வேண்டு மென்றும் சென்னை மகாநாட்டில் பலர் பேசியிருக்கின்றனர். இவ்விஷயங்களை யெல்லாம் அதிகாரிகள் நன்கு கவனித்து, உடனேயே வேண்டிய நடவடிக்கைகள் எடுப்பார்கள் என நம்புகின்றோம். விலை நிர்ணயக் கமிட்டிகளைக் கூட்டி, விலைவாசிகளை நிர்ணயித்துப் பத்திரிகைகளுக்கும் மேலதிகாரிகளுக்கும் அனுப்புவதுடன் கடமை தீர்ந்து விட்டதென்று கருதினால், பொதுஜனங்களுக்கு எவ்வித நன்மையும் ஏற்படா தென்பதை அதிகாரிகள் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறோம். இத்துறையில் அதிகாரிகள் பொதுஜனப் பிரதிநிதிகள், தலைவர்களுடன் கலந்து, கமிட்டியார் குறிப்பிடும் விலை விகிதங்களுக்கே பொருள்கள் பொதுமக்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டும். மீறுகிறவர்கள் மீது சென்னை மகாநாட்டு முடிவுப்படி நடவடிக்கை யெடுப்பது சிறந்த பலனைத் தருவது நிச்சயம். அரிசி முதலிய முக்கிய உணவுப் பொருள்களைச் சர்க்காரே போதுமான அளவு ஆங்காங்கே சேமித்துவைத்துக் குறிப்பிட்ட விலைக்கு விற்பதற்கு ஏற்பாடு செய்வது பொதுமக்களுக்குச் செய்யும் பெருதவியாக இருக்கும். இதில் முனிஸிபாலிடி முதலிய ஸ்தல ஸ்தாபனங்களும் ஒத்துழைக்கலாம். யுத்தம் இன்னும் அதிக நாள் நீடிக்கும் என்று சொல்லப்படுகிறது. ஆகையால், காலதாமதமின்றி அரசாங்கம் மேற் சொன்ன விஷயங்களிற் கவனஞ் செலுத்தித் தக்க நடவடிக்கை யெடுக்க வேண்டு மென்று கோருகிறோம்.

## உள்ளூர்ச் செய்திகள்

### மழை

சென்ற வாரம் 22-உயிலிருந்து 24-உ முடிய 2·55 அங்குலம் மழை பெய்திருக்கிறது. திங்களன்று மட்டும் 1·05 அங்குலம் மழை பெய்தது.

### நகர சபைக் கூட்டம்

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டம் ஒன்று நவம்பர் 29-உ சனிக்கிழமை மாலை 5 மணிக்கு 'காந்தி மாளிகை'யில் நடைபெறும். சொத்து வரியை உயர்த்தும் விஷயம் இக் கூட்டத்தில் ஆலோசனைக்குவருகிறது.

### தேவாரத் திருமுறைத் திருவிழா

நாளது கார்த்திகைமீ 16-ந் தேதி திங்கட்கிழமை சோமவாரத்தன்று நாகநாதபுரம் சிவன் கோவிலில் எல்லா மூர்த்திகளுக்கும் அபிஷேக ஆராதனைகள் செய்து, பன்னிரு திருமுறை பூர்த்திசெய்து, மறுமுறை ஆரம்பமும் செய்து திருமுறைகளுடன் ஸ்ரீ பிரகநாயகி அம்பா சமேத ஸ்ரீ நாகநாத சுவாமி புறப்பாடும் நடைபெறும் என்று நாகநாதபுரம் பள. செ. மு. தேவாரப் பாடசாலை டிரஸ்டி முத்துக் கருப்பஞ்செட்டியார் தெரிவிக்கிறார்.

## ராஜீயக் கைதிகள் விடுதலை

### மிஸ்டர் அமெரியின் பதில்

"இந்தியாவில் திருப்திகரமான நிலைமை ஏற்படுவதற்குப் பூர்வாங்கமாக ராஜீயக் கைதிகளில் சிலரையாவது விடுவிப்பது சம்பந்தமாக இந்தியா மந்திரி புனராலோசனை செய்யத் தயாராயிருக்கிறாரா" என்று மாட்டனால்டு சேட்ட கேள்விக்கு மிஸ்டர் அமெரி அளித்த பதிலாவது:—

"இந்தியாவில் சட்டமறுப்பு இயக்கம் பற்றிய குற்றங்களுக்காகச் சிறையில் இருந்து வருவோர், அல்லது காவலில் வைக்கப்பட்டிருப்போரின் தொகை துரிதமாகக் குறைந்து வருகிறது. அவர்களது விடுதலையை இன்னும் துரிதப்படுத்தக் கூடுமா என்பது பற்றி ஆலோசனை நடந்து வருகிறது."

### பாதுகாப்புக் கைதிகள் விடுதலைக் கிளர்ச்சி

### கைதிகள் சகாயக் கமிட்டி முடிவு

மத்தியப் பாதுகாப்புக் கைதிகள் சகாயக் கமிட்டி ஸ்ரீமான் என். எம். ஜோஷி தலைமையில் புதிய டில்லியில் 20-ந் தேதி கூடி பாதுகாப்புக் கைதிகள் விடுதலையை வற்புறுத்த நாடெங்கும் பலத்த கிளர்ச்சி துவங்குமாறு தீர்மானித்தது. மேற்கண்ட கமிட்டிக்குப் பலர் மெம்பர்களாகத் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர். கமிட்டி வேலைசெய்ய ரூ. 5000 வேண்டு மென்றும் கோரியிருக்கிறது.

### 'டைம்ஸ்' கருத்து

ராஜீயச் சிறையாளர் விடுதலைபற்றி லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகை எழுதுவதாவது:—

அரசியல் கைதிகளை விடுவிப்பதால் மட்டும் அடிப்படையான பிரச்னை தீர்ந்து விட முடியாது. விடுதலை ஏற்பட்டாலும் காந்திஜி தனது கொள்கையை மாற்றப் போவதில்லை; இதனால் இந்தியருக்கு அதிகப் பலனேற்படப் போவதில்லை. ராஜீயக் கைதிகள் விடுதலையை சர்க்காரின் புதுமுயற்சியின் ஆரம்பமாகக் கொண்டு இந்தியப் பிரச்னையைத் தீர்க்க வழிதேட வேண்டும்.

### திட்டத்தைப் புனராலோசனை செய்ய

### காந்திஜியிடம் கோரிக்கை

நான்கு தினங்களாக ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாருடனும், புலாபாய் தேசாயுடனும் விவாதித்ததன் பலனாக, காங்கிரஸ் தனது கொள்கையையும் திட்டத்தையும் மீண்டும் பரிசீலனை செய்ய வேண்டுமா என்பது பற்றிப் புனராலோசனை செய்ய மகாத்மா காந்தி ஒப்புக்கொண்டிருக்கிறாராம். அரசியல் கைதிகள் விடுதலை செய்யப்பட்டால், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியைக் கூட்ட மகாத்மா காந்தி சம்மதிப்பா ரென்றும் ஊகிக்கப்படுகிறது.

### இனோனு பேர்லின் விஜயம்

துருக்கி ஜனதிபதி இனோனு சீக்கிரத்தில் ஹிட்லர் அழைப்பிற் கிணங்க பெர்லின் செல்வார் என்று தெரிகிறது. அவர் விஜயம் செய்வதன் நோக்கம் திட்டமாகத் தெரியவில்லை யாயினும், நாஜிகளின் சமாதான நிபந்தனைகளை அறிவதற்கோ, வியன்னு மகாநாட்டில் கலந்து கொள்வதற்கோ இருக்கலாமென்று கருதப்படுகிறது. இன்னும் டார்டனல்ஸ் ஜலசந்தியை இத்தாலியக் கடற்படைகளுக்குத் திறந்துவிடும்படி கேட்பதற்காக அவரை அழைத்திருப்பதாகவும் சொல்லப்படுகிறது. துருக்கிப் பிரதம மந்திரி டாக்டர் ரேபிக்ஸேடாம் ஏற்கனவே பெர்லினில் இருக்கிறாராம்.

## சென்னை ஸ்திரீகள் மகாநாடு

### பீகம் அமீருதீன் தலைமை உரை

சென்னை ஸ்திரீகள் மகாநாடு சென்னை லேடி வில்லிங்டன் பெண்கள் ஹைஸ்கூலில் நவம்பர் 22-ந் தேதி பீகம் அமீருதீன் தலைமையில் நடைபெற்றது. பீகம் அமீருதீன், ஹிந்து ஸ்திரீகள் சொத்துரிமைச் சட்டம் விவசாய நிலங்கள் சம்பந்தமாகச் செல்லாது என்று சமஷ்டிக் கோர்ட்டு கொடுத்த தீர்ப்பை ஆக்ஷேபித்து பெண்கள் விவசாய நிலங்களை அடைவதற்கு அனுகூலமளிக்கும்படி மாகாண சட்ட சபைகளைக் கேட்டுக்கொள்வதாகவும், மற்றும் பெண்களுக்கு மாகாண அரசாங்கங்களிலும், மத்திய அரசாங்கத்திலும் உயர் பதவிகள் வகிக்க வசதியளிக்கவேண்டுமென்றும் தலைமை உரையில் கோரினார்.

புதிய உலக ஏற்பாட்டுக்கு மாதரும் செத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும், வகுப்பு ஒற்றுமையை வற்புறுத்தியும், விபசாரத் தடைச் சட்டத்தை இன்னும் விஸ்தரிக்கும்படியும், வயது வந்தவர் கல்வி, ஹிந்து ஸ்திரீகள் சொத்துரிமை, கோவில்களுக்குப் பெண்களைப் பொட்டுக் கட்டுதல் ஆகியவை சம்பந்தமாயும் சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. மகாநாட்டிற்குச் சென்னை கவர்னர் மனைவி லேடி ஹோப்பும், அவரது மூத்த பெண்ணும் விஜயம் செய்திருந்தனர்.

### திருவண்ணாமலை அர்த்த மண்டப வழக்கு

திருவண்ணாமலை ஸ்ரீ அருணாசலீஸ்வரர் ஆலயத்தில் அர்த்த மண்டபத்தில் பிராமணர்கள் சென்று தொழுவதைக் கோவில் தர்மகர்த்தாக்கள் நிறுத்திவைத்து விட்டதாகவும், அந்த உரிமையைத் திரும்பப் பெறவும் திருவண்ணாமலை நகர பிராமணர்கள் ஐவர் ஜில்லா முன்சீப் கோர்ட்டில் பிராது செய்து கொண்டனர்.

வழக்கு நவம்பர் 21-ந் தேதி விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. வாதி தரப்பில், இன்ஜங்க்ஷன் ஆர்டரை கோர்ட்டார் அளிக்கும்படி கோரி ராவ்சாகிப் என். நடேசய்யர் பேசுகையில், பிரதிவாதிகள் தங்கள் ஸ்டேட்மெண்டில் இக்காலத்திலுள்ள பிராமணர்கள் பழங்காலத்தவர்களைப் போல் வேதம் உணர்ந்தவர்களாக இல்லை யென்று குறிப்பிட்டதின் பேரில் பல சட்டப் புஸ்தகங்களிலிருந்தும், சாஸ்திரங்களிலிருந்தும், பிராமணர்கள் எடுத்துக்காட்டி, பிராமணன் பிறப்பிலிருந்து கடைசி வரைப் பிராமணனேதா னென்றும், இந்த ஜென்மாவில் அவன் கடமையைச் செய்யத் தவறினால் மறு ஜென்மாவில் அவன் அதன் பலனை யடைவானென்றும், அவன் கடமையைச் செய்யத் தவறினால் அதைத் தண்டிக்கத் தகுந்தவர்கள் ஆலய தர்மகர்த்தாக்களல்ல வென்றும் பேசியபின் வழக்கு 29௳ சனிக்கிழமைக்கு ஒத்திவைக்கப்பட்டது.

### தியோலி உண்ணுவிரத நிறுத்தம்

நவம்பர் 22-ந் தேதியோடு தியோலி உண்ணுவிரதிகளனைவரும் உண்ணுவிரதத்தை நிறுத்தி விட்டனர். ஸ்ரீ ஜோஷி வேண்டுகோளுக் கிணங்கி முன்னர் உண்ணுவிரதம் நிறுத்தியவர்கள் 184 பேர்; தற்போது நிறுத்தியவர்களின் தொகை 50. நிபந்தனை எதுவுமின்றி உண்ணுவிரதம் நிறுத்தப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. தியோலி உண்ணுவிரதிகளிடம் அனுதாபம் காட்டி உண்ணுவிரத மிருந்த மாண்ட்கோமரி சிறையிலுள்ள 13 காவற் கைதிகள் தங்களது உண்ணுவிரதத்தை நிறுத்திக்கொண்டு விட்டனர்.

### சேலம் மதுவிலக்கு வழக்குகள்

### ஸ்திரீகளுள்பட 31 பேர்கள் கைது

கிருஷ்ணகிரி தாலூகாவைச் சேர்ந்த மருதேரிபட்டி என்னும் கிராமத்தில் நவம்பர் 16-ந் தேதி மதுவிலக்குப் போலீசார் இன்ஸ்பெக்டர் பி. டேவிட். குமரேசனின் தலைமையில், சோதனை போட்டதின் பேரில், மூன்று கட்டைவண்டி திருட்டுச் சாராயம் காய்ச்சும் சாமான்களும், 432 டிராம் சாராயமும் பறிமுதல் செய்யப்பட்டன. சில ஸ்திரீகள் உள்பட மொத்தம் 31 பேர்கள் கைது செய்யப்பட்டு மதுவிலக்குச் சட்டத்தின் கீழ் சார்ஜ் செய்யப்பட்டிருக்கின்றனர்.



## யுத்தச் செய்திகள்

சென்ற வாரம் வந்த செய்திகள் மாஸ்கோ மிகவும் கவலைக்கிடமான நிலைமையில் இருப்பதை உணர்த்துகின்றன. மாஸ்கோவுக்கு மேற்கே சுமார் 30 மைல் தூரத்திலுள்ள லோண்ட்ஷ்னோ கோர்ஸ்கி என்ற பட்டணத்தை ஜெர்மானியர் பிடித்து விட்டதாக 24௳ லண்டனிலிருந்து வந்த செய்தி யொன்று கூறுகிறது. மொஜாக்ஸ், வாலகாலாம்ஸ்க் பகுதிகளிலிருந்து ரஷ்யர் அனைவரும் பின்வாங்கி விட்டனர். தெற்கே கலினின், டூலா பகுதிகளில் நிலைமை திருப்திகரமாகவில்லை. அக்டோபர் ஆரம்பத்திலிருந்து மாஸ்கோ தாக்கப்பட்டு வருகிறது. சுமார் 7½ லக்ஷம் ஜெர்மன் துருப்புகள் இடைவிடாமல் தாக்கி வருகின்றனவாம். தென் அரங்கத்தில் சிறிது நிம்மதி நிலவி வருகிறது என்று சொல்லப்படுகிறது; என்றாலும் எல்லாப் பக்கங்களிலும் ஜெர்மானியரின் தாக்குதல் வலுத்துத் தானுள்ளது. ராஸ்டாவ் நகரைப் பிடித்து விட்டதாக 22௳ ஹிட்லர் தலைமைக் காரியாலயத்திலிருந்து வந்த செய்தி கூறுகிறது. ஆனால் ரஷ்யர் இதை மறுத்து பட்டணத்தின் தென்பகுதி அரணைத்தான் ஜெர்மன் சைன்யம் ஊடுருவிற்றென்றும், இன்னும் ரஷ்யர் கடுமையாக எதிர்த்து வருவதாகவும் அறிவிக்கிறது. ராஸ்டாவ் போக்குவரத்துக்கு முக்கியமான நகரம், அநேக யுத்த தளவாடத் தொழிற் சாலைகள் அங்கே உள்ளன. கிரான்வி பட்டணத்திலுள்ள பெட்ரோல் கிணறுகளிலிருந்து இத்தப் பட்டணத்துக்கு எண்ணெய்க் குழாய்கள் வருகின்றனவாம்.

லெனின் கிராட் முனையில் நிலைமை திருப்திகரமாக விருக்கிறது. 3,000 பேர் கொண்ட இரண்டு ஜெர்மன் காலாட் படைகள் பலமான சேதமடைந்த தாகவும் வால்காவ் பகுதியில் ஜெர்மனியர் அநேக மைல்கள் துரத்தப்பட்டதாகவும் சமீபத்தில் வந்த ரஷ்யச் செய்தி கூறுகிறது.

### லிபியா அரங்கம்

திடீரென்று பிரிட்டிஷ் படைகள் ஆப்ரிக்காவில் லிபியாப் பகுதியில் முன்னேறித் தாக்கியது ஜெர்மனியருக்குப் பெரும் வியப்பைத் தந்திருக்கிறது. இத்தத் திடீர் தாக்குதலின் பலனாக, காபுஸோ கோட்டை, பார்டியா துறைமுகம், வீடி உமார் என்ற பட்டணம், காம்பாட் என்ற இடங்கள் வெகு எளிதில் பிரிட்டிஷ் படைகள் வசம் வந்துவிட்டன. லிபியா யுத்தம் ஆரம்பித்ததிலிருந்து இதுவரை சுமார் 15,000 எதிரித் துருப்புகள் பிடிபட்டிருப்பதாயும், அதில் பெரும்பாலோர் இதாலியர் என்றும் தெரிகிறது. இங்கு இந்தியத் துருப்புகள் காட்டும் அபார வீரத்தை அனைவரும் புகழ்கின்றனர். வீடி உமார் பட்டணத்தைப் பிடித்தபோது இந்தியப் படையினர் சுமார் 8,000 இதாலியரைக் கைது செய்தனராம்.

ஜெர்மன் ராணுவப் பொருளாதார நிபுணர்களைக்கொண்ட கோஷ்டியொன்று சீக்கிரத்தில் பிரெஞ்சு வட ஆப்ரிக்காவுக்குச் செல்லுமாம். ஹிட்லர் மார்ஷல் பிடேயினுடன் கலந்து பேசும்பொருட்டு அடுத்த வாரம் ஜெர்மன் ஆக்ரமித்த பிரான்சுக்குச் செல்வாராம். பிரெஞ்சு வட ஆப்பிரிக்காவுக்குள் அச்சுத் துருப்புகள் செல்வதற்கு இணங்கும்படி மார்ஷல் பிடேயினை ஹிட்லர் வற்புறுத்தவர். இச்சம்பாஷணையின்போது முஸோலினியும் கூட இருப்பார் என்று சொல்லப்படுகிறது.

## ஆந்திர மாகாணப் பிரிவினை

### ஆந்திர மகாசபைத் தீர்மானம்

ஆந்திர மகா சபையின் 22-வது மகாநாடு விசாகபட்டினத்தில் நவம்பர் 22, 23 தேதிகளில் நடைபெற்றது. ஸ்ரீ பி. வெங்கடபதி ராஜு வி. ஐ. இ. மகாநாட்டை ஆரம்பித்து வைத்தார். விஜயநகரம் மகாராஜ குமார் ஸர் விஜய ஆனந்த கஜபதி தலைமை வகித்தார். ஆந்திர நாட்டு மக்களின் அரசியல், சமூக, பொருளாதார, கலாசார அபிவிருத்திக்கு ஆந்திரம் தனி மாகாணமாக இருப்பது மிக அவசியமாதலால், ஆந்திர மாகாணத்தை அமைப்பதற்கு உடனேயே நடவடிக்கைகள் எடுக்குமாறு இம் மகாசபை சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறது என்று ஓர் தீர்மானம் நிறைவேறியது. ஜனநாயக சர்க்கார் ஏற்படும்பொழுது, ஆந்திர மாகாணம் ஏற்படுவதற் கிருக்கும் தடைகளை நீக்கும்படியும் பொதுஜனப் பிரதிநிதிகளை மகாநாடு கேட்டுக்கொண்டது.

விஷயாலோசனைக் கமிட்டியில் ஸ்ரீ பிரகாசம் இது சம்பந்தமாகக் காங்கிரசுக்குள்ள மனோபாவத்தை விளக்கினார். சென்னைக் காங்கிரஸ் மந்திரி சபை ஏகோபித்து ஆந்திர மாகாணம் ஏற்பாட்டை ஆமோதித்ததாயும், அப்போதிருந்த கவர்னர் எர்ஸ்கின் பிரபுவும் இதற்குச் சாதகமாகவே இருந்ததாயும், இந்தியா மந்திரியிட மிருந்து எவ்விதப் பதிலும் வாராதது பெரிய ஏமாற்றத்தை அளித்ததாயும், லண்டனில் விசாரித்ததில், எர்ஸ்கின் பிரபு சாதகமாகச் சிபார்சு செய்யாமல் ஆந்திரத்தைப் பிரித்தால் தமிழர்களும் ஆந்திரர்களும் மண்டையை உடைத்துக் கொள்ளுவார்கள் என்று எழுதியிருந்தது தெரியவந்ததாயும், ஆந்திர மாகாணப் பிரிவினை விஷயத்தில் இந்தியர்களே விரோதிகளாக நடந்து கொண்டார்களென்றும், இதுபற்றிப் பிரிட்டிஷாரையோ, காங்கிரஸ் தலைவர்களையோ குறை கூறுதற்கிடமில்லை யென்றும் ஸ்ரீ டி. பிரகாசம் கூறினார்.

## தமிழ் நாடு ஹிந்தி மகாநாடு

### ஹிந்தியை இன்னும் பரப்ப வழி

3-வது தமிழ் நாடு ஹிந்தி மகாநாடு சேலத்தில் சென்னை ஸ்ரீ கே. வெங்கடசாமி நாயுடு தலைமையில் 22-ந்தேதி நடைபெற்றது. அ. இ. ஹிந்து மகா சபைக் காரியதரிசி டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு அவர்கள் மகாநாட்டைத் திறந்து வைத்தார். மகாத்மா காந்தி, டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், எஸ். சத்தியமூர்த்தி, ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி, ஸ்ரீமதி முத்துலக்ஷ்மி ரெட்டி ஆகியோர் ஆசிச் செய்தி யனுப்பியிருந்தனர். அகில இந்திய ரேடியோ அதிகாரிகள் இப்பொழுது நடத்திவருவது போலத் தொடர்ந்து ஹிந்தி பாஷை வகுப்புகளை நடத்திவர வேண்டுமென்றும், ஹிந்தியை இன்னும் சுலபமாக அறிந்துகொள்ள ஆசிரியர்கள் இன்னும் பேச்சுப் பாடங்களை அதிகம் சேர்க்க வேண்டுமென்றும், தமிழ்ப் பத்திரிகைகள் ஹிந்தி பாஷைக்காக சில பகுதிகளை ஒதுக்க வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டன. அடுத்த மகாநாட்டைக் கோவையில் நடத்துவதாகத் தீர்மானிக்கப்பட்டது.

## புதுவையில் தமிழிசைப் போட்டி

புதுவை "யங்மென்ஸ் அஸோஸியேஷன்" என்ற இளைஞர் சங்கத்தின் 15-வது ஆண்டுவிழா சம்பந்தமாகத் தமிழ், ஆங்கிலம், பிரான்சு பாஷைகளில் பல போட்டிகள் நடத்துவதாக முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஆண்டுவிழா இம்மாதம் 30-ந் தேதி முதல் ஆரம்பமாகும். டிசம்பர் 21-ந் தேதியன்று ஒரு தமிழிசைப் போட்டியும் நடத்துவதென்று சங்கத்தார் அறிவிக்கின்றனர். போட்டியில் 14 வயது முதல் 20 வயதுக் குட்பட்டவர்கள் பிரவேசக் கட்டணமின்றிக் கலந்து கொள்ளலாமென அறிவிக்கப்படுகிறது. இத்தப் போட்டிக்கு வெளியூர்களிலிருந்து வருபவர்களுக்குத்தங்க இடமும் சாப்பாட்டு வசதிகளும் செய்து கொடுக்கப்படும். இத் தப் போட்டிக்காக சுவாமி சுத்தானந்த பாரதியார் அவர்கள் காம்போஜி இராகத்தில் ஒரு கவியையும், நான்கு ராகங்களில் பாடக்கூடிய ஒரு ராகமாலிகை விருத்தத்தையும் அமைத்துதவி யிருக்கிறார். இவைகளைத்தான் போட்டியில் பாடவேண்டும். அண்ணாமலை நகர் சங்கீதக் கலாசாலைத் தலைவர் ஸ்ரீமான் டைகர் வரதாச்சாரியார் தமிழிசைப் போட்டிக்குத் தலைமை வகிப்பார். சங்கீத வித்வான் தீவனூர் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையும் போட்டியின் நீதிபதிகளில் ஒருவராக இருக்க இசைந்துள்ளார். மற்ற விவரங்களுக்கு சங்கக் காரியதரிசிக்கு விண்ணப்பித்துக் கொள்ளலாம்.

லிபியப் போரில் சுமார் 15000 இதாலியக் கைதிகள் பிடிபட்டிருக்கின்றனர். இவற்றுள் 8000 கைதிகளை இந்தியப் படைமட்டும் பிடித்துக்கொடுத்ததாம்.

## ஜப்பான் ராஜிப் பேச்சு முறிந்து விட்டது

### இரண்டு வாரத்தில் போர்?

ஜப்பானின் விசேஷ தூதரான குருசு வாஷிங்டன் சேர்ந்து ஜப்பான் சார்பாக அமெரிக்காவுடன் சமரசப் பேச்சு நடத்தினர். சமரசப் பேச்சு முறிந்து விட்டதாகவும், குருசுவின் தூதுகோஷ்டி ஜப்பான் திரும்பி விடுமென்றும் சொல்லப்படுகிறது. இதன் காரணமாக இன்னும் இரண்டு வாரங்களுக்குள் ஜப்பான் போர்துவக்கக் கூடுமென்று ஒரு பிரபல அமெரிக்கர் தெரிவித்திருக்கிறாராம்.

### ஜப்பானின் ஏழு நிபந்தனைகள்

"ஜப்பானிஸ் டைம்ஸ் அண்ட் அட்வர்டைசர்" என்ற ஜப்பானிய பத்திரிகை ஜப்பான் அமெரிக்க சம்பாஷணையில் ஜப்பான் கீழ்க்கண்ட ஏழு நிபந்தனைகளை நவ. 5-ந் தேதி இதழில் தெரிவித்திருக்கிறது:- (1) சுங்கவுக்கு இராணுவ உதவி யனுப்புவதை நிறுத்துதல், (2) ஜப்பானுடன் சமாதானம் செய்து கொள்ளும்படி சைனுவுக்கு ஆலோசனை கூறுதல் (3) பொருளாதார முற்றுகையை நிறுத்துதல், (4)மேற்கு பசிபிக் பிரதேசத்தில் ஜப்பானின் தலைமை ஸ்தானத்தை அங்கீகரித்தல், (5) மஞ்சுகோ அரசாங்கத்தை ஒப்புக் கொள்ளுதல், (6) இரு நாடுகளும் பொருளாதாரத் தடை உத்திரவுகளை ரத்து செய்தல், (7) ஓர் புதிய ஜப்பான் அமெரிக்க வியாபார ஒப்பந்தம் ஆகியவை.

### சைகோனில் 90 பேர் கைது

ஜப்பானியருக்கு விரோதமாக வேலை செய்யும் சங்கிக் ஏஜெண்டுகளெனச் சொல்லப்பட்ட 90 பேர்களை ஒரு ஜப்பானியப் படை கைது செய்தது.

### சைகோனில் வெடி விபத்து

சைகோனிலுள்ள யுனைடெட் ஸ்டேட்ஸ் ஸ்தானீகர் காரியாலயம் 23-ந் தேதி இரவு வெடி விபத்துக்குள்ளாகித் தகர்க்கப்பட்டு விட்டது. வெடிவிபத்து ஏற்பட்டதன் காரணம் தெரியவில்லை. இதுபற்றி இந்தோ—சீனு போலீஸார் புலன் விசாரித்து வருகின்றனர்.

## புதுக்கோட்டைச் செய்திகள்

### சிப்பாய்களின் குழந்தைகளுக்குக் கல்வி வசதி

யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் சிப்பாய்களின் குழந்தைகளுக்கும், யுத்தத்தில் மாண்ட அல்லது படுகாயமுற்ற வீரர்களின் குழந்தைகளுக்கும், பற்பல கல்விச் சாதகங்களை அளிப்பதாகத் தர்பார் விளம்பரப்படுத்தி யிருக்கிறார்கள். மற்ற சிப்பாய்களின் குழந்தைகளுக்கும், சிப்பாய்கள் பட்டாளத்தை விட்டு விலக்கப்பட்ட பிறகும் அவரவர் படிக்கும் வகுப்பின் கால வரைக்குத் தக்கவாறு இச் சாதகங்கள் தொடர்ச்சியாய் அளிக்கப்படும். இலவச ஸ்காலர்ஷிப் உண்டு; ஆனால் மற்ற ஸ்காலர்ஷிப்புகளுக்கும் போட்டி போடலாம். வேறு ஜாகை யில்லாவிட்டால், ஹாஸ்டலில் இலவசச் சாப்பாடு அளிக்கப்படும். புஸ்தகங்கள் வாங்குவதற்காக பிரைமரி ஸ்கூலில் வருடம் 12 ரூபாய் வீதமும், 1-முதல் 3 பாரங்கள் வரை வருஷம் 14 ரூ. வீதமும், 4 முதல் 6 பாரங்கள் வரை வருஷம் 30 ரூ. வீதமும் உதவப்படும்.

### சீப் கோர்ட் ஜட்ஜ்

ஸ்டேட் வக்கீலும் பப்ளிக் பிராஸிகூட்டருமான ஸ்ரீ ஆர். ஸ்ரீனிவாசாச்சாரியார் அவர்கள் பி. ஏ., பி. எல்., சீப்கோர்ட் ஜட்ஜாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

சீப்கோர்ட் வக்கீல் ஸ்ரீ ஆர். ராஜகோபால ஐயர் அவர்கள் பி. ஏ., பி. எல்., ஸ்டேட் வக்கீலாகவும், பப்ளிக் பிராஸிகூட்டராகவும் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

### கார் விபத்து

சென்ற சனிக்கிழமை மாலை புதுக்கோட்டையிலிருந்து ஐந்து மைல் தூரத்திலுள்ள செய்வாசல்பட்டி ரோட்டில் அரிமழம் சென்றுகொண்டிருந்த ஒரு மோட்டார் பஸ் ஒரு இரட்டை மாட்டு வண்டியைக் கடந்து செல்ல முயன்றபோது ரோட்டை விட்டு விலகிப் பக்கத்தி லுள்ள வயலில் விழுந்துவிட்டது. ஆறு பிரயாணிகள் காயமுற்றனர். புதுக்கோட்டை ஜெனரல் ஆஸ்பத்திரியில் அவர்கள் சிகிச்சைசெய்யப்பட்டனர்.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

(தாமதித்து வந்த தந்தி)

ரங்கூன் நவ-19௳

| | |
|---|---|
| ஙசேன் செல் புதிது 46 பவுண்டு | 144/146 |
| ஷை பழசு | 188/190 |
| மீடான் பழசு | 204/205 |
| சுகந்தி வெள்ளை அரிசி | 490/500 |
| சிறியமில் மாண்டலே | 430/435 |
| முழுப் புழுங்கல் | 450/455 |
| மில்சார் புரோம் | 450/455 |
| மில்சார் மாண்டலே | 449/455 |
| ஙசேன் முழுப் புழுங்கல் | 420/425 |

### கொழும்பு மார்க்கெட்

கொழும்பு, நவ. 24௳

| | |
|---|---|
| கிரேப் ரப்பர் | 57½ சதம் |
| ஷீட் ,, | 56 ,, |

கொப்பரா

| | |
|---|---|
| முதல் தரம் | ரூ. 34-75 |

### சிங்கப்பூர் ரப்பர்

நவ. 22௳

புகை போட்டது ஸ்டாண்டர்டு ஒரு பீக்கல் ஐம்பத் தொரு வெள்ளி பதினேழு காசு.

### சென்னை மார்க்கெட்

சென்னை, நவ. 25௳

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 29 | 10 | 0 |
| சவரன் (சில்லறையில்) | 29 | 10 | 6 |
| மூளை தோலா 1க்கு | 43 | 11 | 0 |
| வெள்ளி செடி 100 தோலா | 63 | 12 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 10 | 6 |

### லண்டன் இந்திய ஹை கமிஷனர்

### ஸர் மிர்ஸா இஸ்மேல் நியமிக்கப்படுவார்

ஸர் மிர்ஸா இஸ்மேல் லண்டன் ஹை கமிஷனராக நியமிக்கப்படுவார் என்று லண்டன் செய்தி யொன்று கூறுகிறது. ஆனால் இது இன்னும் ஊர்ஜிதம் செய்யப்படவில்லை.

### குறித்த காலத்தில் சத்தியாக்கிரகம் செய்யாதவர்கள்

குறித்த காலத்தில் சத்தியாக்கிரகம் செய்யாமல் தயங்கி இருந்ததற்காக மஹா கோசலத்தில் 140 பேர்களை சத்தியாக்கிரகிகள் ஜாபிதாவிலிருந்து விலக்கி விட்டனர். இவற்றில் விலாஸ்பூரைச் சேர்ந்தவர் 88பேர்; பல்காட்டைச் சேர்ந்தவர் 52 பேர்.

### லேட்சுமிபுரம் ஸ்ரீ மீனாட்சி சங்கம்

ஷை சங்கத்தின் மாதக் கூட்டம் நாளது கார்த்திகை-மீ 3௳ மாலை 3-45 மணிக்கு வாலாஜாபாத் இந்து மத பாடசாலையின் அதிபர் திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சொக்கலிங்க வித்தியாசாலை அதிபர் திரு. க. சொ. அரு. அருணாசலம் செட்டியார் அவர்கள் தலைவரை சபையோர்க்கு அறிமுகம் செய்து வைத்து அவர்களைத் தலைமைதாங்கி நடத்தித் தருமாறு கேட்டுக்கொள்ள தலைவரவர்களும் தமது முன்னுரையில் வித்தியா தர்மத்தின் உயர்வைப் பாராட்டிப் பேசினார்கள். வித்தியாசாலை மாணவ மாணவிகள் பாட்டு, பேச்சு, நடிப்பு, தேவாரம், கும்மி கோலாட்டம் முதலியன நிகழ்த்தினர். அலவாக்கோட்டை திரு. காஎ. நாகப்ப செட்டியார் அவர்கள் "கல்வியின் பெருமை" என்னும் பொருள்பற்றியும், கானாடுகாத்தான் திரு. சிதம்பரம் செட்டியார் அவர்கள் "கல்விச் செல்வம்" என்னும் பொருள்பற்றியும் சொற்பெருக்காற்றினர்கள். சென்ற மாதத்தில் ஒவ்வொரு வகுப்பிலும் தினமும் சுத்தமாக வந்த மாணவர்களுக்குத் தலைவரவர்களால் பரிசுகள் வழங்கப்பெற்றன. இறுதியில், தலைவர் அவர்கள் தகுந்த முடிவுரை கூறி அனைவருக்கும் தமது வணக்கத்தைத் தெரிவித்ததும், வித்தியாசாலை அதிபர் அவர்கள் தலைவர் அவர்களுக்கு மாலை சூட்டி வந்தனங் கூற யாவர்க்கும் கற்கண்டு வழங்கப் பெற்று நாட்டு வாழ்த்துடன் கூட்டம் 6-மணிக்கு இனிது நிறைவெய்தியது.

## இந்தியாவில் மோட்டார் வாகனங்கள்

### பம்பாய்க்கு முதல் ஸ்தானம்

இந்தியாவில் 1940, மார்ச் 31-ந் தேதி மொத்தம் 1,36,347 மோட்டார் வாகனங்கள் இருந்தன. இவற்றில் மோட்டார் கார்கள் 85,205; மோட்டார் சைக்கிள்கள் 7858; டீசல் எஞ்சின் வாகனங்கள் 395. பம்பாய் மாகாணந்தான் இதில் முதல் ஸ்தானம் வகித்தது. அங்கு 17,604 மோட்டார் கார்கள் உள்பட 27,830 மோட்டார் வாகனங்கள் இருந்தன. வங்காளத்தில் 17042 கார்கள் உள்பட 24,289 மோட்டார் வாகனங்கள் இருந்தன. சென்னை மூன்றாவதாக நின்றது. அங்கு 13,955 கார்கள், 1403 மோட்டார் சைக்கிள்கள், 85 டீசல் எஞ்சின் வாகனங்கள் உள்பட மொத்தம் 21,278 வாகனங்கள் இருந்தன.

அந்தமான், நிக்கோபார் தீவுகளில் தான் மிகக் குறைந்த தொகையில் மோட்டார் வாகனங்கள் இருந்தன—115. மோட்டார் கார்கள் 39ம் மோட்டார் சைக்கிள்கள் 33ம். இந்தியாவின் தலைநகரும், தனி மாகாணமுமான டில்லியில் ஜனத்தொகை 9 லட்சத்துக்கு சற்று அதிகம்; அங்கு 2017 கார்களும் 296 மோட்டார் சைக்கிள்களுமிருந்தன.

### விலைவாசிகள் நிர்ணயம்

திருவாடானைத் தாலுகாவில் விலைவாசிகள் நிர்ணயக் கமிட்டி 14—11—41ல் கூடி நிர்ணயித்த விலைகள்:—

| | | | |
|---|---|---|---|
| நெல் முதல்தரம் | ரூ. 1-க்கு படி | | $10\frac{1}{4}$ |
| ஷை 2-ந் தரம் | ,, | ,, | $10\frac{1}{2}$ |
| புழுங்கல் அரிசி | ,, | ,, | $4\frac{1}{4}$ |
| கார் அரிசி | ,, | ,, | $4\frac{3}{4}$ |
| கேப்பை | ,, | ,, | 10 |
| து. பருப்பு முதல் தரம் | ,, | ,, | $3\frac{3}{4}$ |
| ஷை 2-வது தரம் | ,, | ,, | 4 |
| உளுந்தம் பருப்பு | ,, | ,, | $3\frac{1}{4}$ |
| பாசிப்பருப்பு | ,, | ,, | $3\frac{3}{4}$ |
| கடலை | ,, | ,, | $4\frac{3}{4}$ |
| கடலைப்பருப்பு | ,, | ,, | $3\frac{3}{4}$ |
| உப்பு படி 1க்கு | | | 0-1-7 |
| சர்க்கரை நாட்டுப் பழுப்பு வீசை | | | 0-8-6 |
| ஷை அசிசப் பழுப்பு | ,, | | 0-4-0 |
| அஷ்டகிராம் வெள்ளை | ,, | | 0-7-6 |
| மிளகாய் (சம்பா) | ,, | | 0-8-6 |
| மல்லி | ,, | | 0-2-4 |
| தீப்பெட்டி | 1க்கு | | 0-0-5 |
| திருப்பூர் 4-முழம் வேஷ்டி | ,, | | 0-11-0 |
| ஈரோடு ,, | ,, | | 0-10-0 |
| மண்ணெண்ணெய் பாட்டில் | ,, | | 0-3-0 |
| ஷை ஈயம் | ,, | | 0-3-3 |

(நெல்லூர் அரிசி முதல்தரம், 2-ந்தரம் ஷை மதியாச் சம்பா, கால் குருணை, அரைக் குருணை, கொள்ளு, மிளகாய் (குண்டு) இவை கிடைக்கவில்லை).

## நோட்டீஸ்

சிவகெங்கை
டி. முன்சிப் கோர்ட்டு
1939ஷ O. S. No 162
1941ஷ I. A. No 364

கூம்பாச்சிப்பட்டி ஆ. சூசை நாடார். } வாதி.

ஷையூர் அருளாந்து சேர்வை 1
சிவக்கியானம் சேர்வை 2
அலங்காரம் சேர்வை 3 } பிரதிவாதிகள்.

கூம்பாச்சிப்பட்டி கிராமத்தில் ஷை நிர். பிரிலிமினரி டிக்கிரியில்க் கண்ட சொத்துக்கள் விஷயமாய் பயினல் டிக்கிரி பெற வாதி மனுக்கொடுத்து கோட்டீஸ் வாயிதா 4-12-1941 ஏற்பட்டிருக்கிற விபரம் இதன் மூலம் தெரிவிக்கப் பட்டிருக்கிறது.

G. பாலகிருஷ்ணய்யர்,
வாதி வக்கீல்
சிவகெங்கை
25-11-1941

## விலைவாசிகள் கட்டுப்பாடு

### மீறும் வியாபாரிகள்மீது நடவடிக்கை எடுக்க

★

சென்னை மகாநாட்டில் தீர்மானம்

சென்னை மேயர் ஸ்ரீமான் வி. சக்கரைச் செட்டியார் தலைமையில் சென்னை கார்ப்பொரேஷன், ஜனப் பிரதிநிதி சபைப் பிரதிநிதிகள், வியாபாரிகளின் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு மகாநாடு நவம்பர் 21ல மாலை ரிப்பன் கட்டிடத்தில் நடைபெற்றது. உணவுப் பொருள் விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதின் அவசியம் பற்றிப் பலர் பேசினர். மேயர் கூட்டத்தை ஆரம்பித்துவைத்துப் பேசுகையில் உணவுப் பொருள் விலைவாசிகள் கட்டுப்பாடு செய்வதில் கவர்ன்மெண்டார் நடவடிக்கை எடுக்க வேண்டுமெனக் கார்ப்பொரேஷன் சென்ற அக்டோபர் 7ல ஒரு தீர்மானம் நிறைவேற்றியதாகவும், இது சம்பந்தமாக யோசனைகள் கூறும்படித் தற்போது கவர்ன்மெண்டார் கேட்டிருப்பதாகவும், உணவுப் பொருள் விலைவாசிகள் அதிகரித்திருப்பது திட்டமாகத் தெரிகிற தென்றும், முக்கியமாக விறகின் விலை மிகவும் உயர்ந்துவிட்டதென்றும், விதித்த விலைக்கு மேற்கொண்டு விற்பவர்களுக்குக் கடுங்காவல் தண்டனை விதிக்கும்படிக்கூட சட் [illegible] வடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படவில்லை யெனவும் தெரிவித்தார். ஸ்ரீ சாமி வெங்கிடாசலம் செட்டியார் யம்.யல்.ஏ., ஜனுப் ஹமீத்கான், ஸ்ரீ ஜி. செல்வபதி செட்டியார், 'சுதேசமித்திரன்' 'மதராஸ் மெயில்' உதவி ஆசிரியர்கள் முதலியோர் உணவுப் பொருள்களின் விலைவாசிகளைக் கட்டுப்பாடு செய்வதன் அவசியம்பற்றிப் பேசினர்.

ஒன்றரை மணிநேர விவாதத்திற்குப் பின் இம்மகாநாட்டில் பின்வருமாறு முடிவு செய்யப்பட்டது: விறகுக்கும் எல்லா உணவுப் பொருள்களுக்கும் விலைவாசிகளில் கட்டுப்பாடுண்டுபண்ணவேண்டும். விலைவாசி ஆலோசனைக் கமிட்டி அமைப்பை விஸ்தரித்து பண்டமுபயோகிப்போர் தொழிலாளர் ஆகியவருக்கு அதில் பிரதிநிதித்துவ முண்டுபண்ண வேண்டும். ஒவ்வொரு முனிசிபல் டிவிஷனிலுமுள்ள கடைகளில் ஆலோசனைக் கமிட்டியார் நிர்ணயிக்கும் விலை ஜாப்தாவைப் பிரசித்தப்படுத்த வேண்டும். கமிட்டி நிர்ணயிக்கும் விலையைச் சில்லறை வியாபாரிகள் பின்பற்றுமாறு கவர்ன்மெண்டார் கவனிக்கவேண்டும். இதை மீறுவோர் விஷயத்தைப் போலீஸாருக்கு அறிவிக்கவேண்டும். ஆலோசனைக் கமிட்டிக்குத் தனி உத்தியோகஸ்தர்கள் ஏற்பட்டு அவர்கள் நகரில் இந்த ஏற்பாடு நடப்பதைப் பராமரிக்கும்படி செய்ய வேண்டுமென்று கவர்ன்மெண்டிற்குச் சிபார்சு செய்வதென முடிவு செய்யப்பட்டது.

—

நியூயார்க் மெதடிஸ்ட் ஆஸ்பத்திரியில் "தந்தையைத் தாய்மை"க்குப் பழக்குகிறார்கள், தாய்மையின் பொறுப்புகளை மனைவியுடன் புருஷனும் சேர்ந்து பகிர்ந்து கொள்ள வேண்டும் என்பதே கொள்கை. சமீபத்தில் அங்கு 19 வாலிபர்கள் பயிற்சி பெற்று டி. டி. பட்டம் பெற்றுள்ளனர்.

—

ஒவ்வொரு வாரமும் அமெரிக்காவிலிருந்து விமானங்கள், டாங்குகள், பீரங்கிகள், உணவுப்பொருள்கள், எண்ணெய் முதலியன பிரிட்டன் வந்துசேர்கின்றன. அமெரிக்காவிலிருந்து வந்த எண்ணெய்ப் பீப்பாய்கள் துறைமுகத்தில் இறக்கப்படும் காட்சியை மேலே காணலாம்.



## இந்திய - இலங்கை யாதாஸ்து

### ராஜாங்க சபையில் விவாதம்

ராஜாங்க சபையின் நவம்பர் 22-ந் தேதிய கூட்டத்தில் இலங்கை-இந்தியா கூட்டு யாதாஸ்து பற்றிய விவாதம் எடுத்துக் கொள்ளப்பட்டது. இந்தியத் தொழிலாளிகள்மேல் கட்டுப்பாடு ஏற்படுத்துவது சுயநலத்துக்காவது பிரயோஜன முண்டா என்பதை இலங்கை சர்க்கார் கவனிக்க வேண்டும் என்று பண்டித குன்ஸ்ரூ சொன்னார். ஒரு வருஷம் இலங்கையை விட்டுவந்தால் இந்தியர் உரிமை இழந்து விடுவார்கள் என்ற விதியிருப்பதால் நிரந்தரமான குடியேற்றத்துக்குக் கொடுக்கப்படும் ஸர்ட்டிபிகேட் பயனற்றதாகி விடுகிறது என்று ஸ்ரீ சாப்ரூ சொன்னார். பல மெம்பர்கள் பேசியபின், ஸ்ரீ ஆனே விவாதத்துக்குப் பதிலளிக்கையில் இவ்விஷயத்தில் இறுதியான முடிவு செய்யுமுன் மெம்பர்கள் எடுத்துக்காட்டிய பல அம்சங்களும் கூர்ந்து கவனிக்கப்படுமென்றும், பொது மக்கள் வெளியிடும் கருத்துக்கும் சர்க்கார் மதிப்புக் காட்டுவர் என்றும் குறிப்பிட்டார்.

### விற்பனை வரிச் சட்ட வழக்கு

ஒரு வியாபாரி தனது மாத விற்பனைப் புள்ளி விவரத்தை அனுப்பா [illegible] பிரச்னையில் சென்னை ஜார்ஜ் டவுன் போலீஸ் கோர்ட்டில் மாஜிஸ்திரேட் தீர்ப்புக் கூறியிருக்கிறார். வேண்டுமென்றே ஒருவர் ரிட்டர்ன் அனுப்பாதிருந்தால் மட்டுமே தண்டிக்கலாமென்றும், மற்றப்படி ஒருவர் ரிட்டர்ன் அனுப்பத் தவறினால் அதற்காகத் தண்டிக்கவேண்டுமென்று சட்டம் கருதவில்லை யென்றும், இது ஷை மசோதாவின் தனிக்கமிட்டியின் விவாதங்களிலிருந்து நன்றாகப் புலப்படுகின்றதென்றும், இதை சம்பந்தப்பட்ட இலாகாதார் கவனித்து, ரிட்டர்ன் அனுப்பாத காரணத்தைக்கொண்டு மட்டும் வியாபாரிகள்மீது குற்றம் சாட்டக்கூடாதென்றும் மாஜிஸ்திரேட் குறிப்பிட்டார்.

### ஒரிஸாவில் புதிய மந்திரி சபை

ஒரிஸா மாகாணத்தில் வைஸ்ராய் சம்மதி பெற்று புதிதாக ஒரு மந்திரி சபை நியமிக்கப்பட்டிருக்கிறது. இதற்கான கவர்னரின் பிரகடனம் ஒரு விசேஷ கெஜட் மூலம் பிரசுரமாகியிருக்கிறது. பார்லகிமீடி மகாராஜா பிரதம மந்திரியாகவும், பண்டித கோதாவரி மிஸ்ரா, மௌல்வி அப்துஸ் ஸோபான்கான் ஆகிய இருவரும் மற்ற இரு மந்திரிகளாகவும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

பண்டித கோதாவரி மிஸ்ரா அஸம்பிளிக் காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகிவிட்ட விஷயம் ஏற்கனவே வெளியாகியிருக்கிறது. புது மந்திரி சபை நியமனம் சம்பந்தமாக வைஸ்ராய் ஒரிஸா கவர்னரையும் பிரதம மந்திரியையும் பாராட்டிச் செய்தி அனுப்பியிருக்கிறார்.

### இந்திய சேனுபதிக்குப் புதிய அதிகாரம்

இலங்கைப் பாதுகாப்பும் இந்திய சேனுபதியாகிய ஸர் ஆர்ச்சிபால்ட் வேவல் அதிகாரத்துக்குட்பட்டதாகவிருக்கும்; இலங்கைத் துருப்புகளின் தலைவராக ஜெனரல் ரோஸ்ஸட்டெபென் ஹாம் இன்ஸ்கிப் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

### நெல்லூர் கலவர அறிக்கை

நெல்லூர் வகுப்புக் கலவரம் சம்பந்தமாக விசாரணை நடத்திய ரிவின்யூ மெம்பர் மிஸ்டர் பிரீஸ்ட்லி ஐ.ஸி.எஸ். தமது அறிக்கையைச் சர்க்காரிடம் சமர்ப்பித்து விட்டார்.

### செந்தமிழ் மன்றம், தேவகோட்டை

நிகழும் கார்த்திகைத் திங்கள் 12-ம் நாள் (27-11-41) வியாழக்கிழமை மாலை 5 மணிக்கு தேவகோட்டை பால்க்காவடியார் தெருவிலுள்ள மன்ற நிலையத்தில் "தமிழ்ப் பண்ணை" என்னும் பொருள் பற்றி தமிழ் அன்பர் திரு. சா. கணேசன் அவர்கள் சொற்பெருக்காற்றுவார்கள்.



## இத்தாலிய மீன் கதை

இது இத்தாலியில் கடுமையான யுத்த காலமல்லவா? இந்த நிலைமையிலே ஒரு இத்தாலியன் குடும்பத்துக்கு சாப்பிட ஒரு ஆகாரமும் கிடைக்கவில்லை. ஒரு நாள் அந்த வீட்டுக்காரன் மீன் பிடிக்கச் சென்று, ஒரு மீன் அகப்பட, அதை மிகச் சந்தோஷத்தோடு தன் மனைவியிடம் கொண்டு வந்தான்.

"அப்பாடா! கடைசியில் வறுத்துச் சாப்பிட ஒரு மீன் கிடைத்தது" என்றான்.

"எண்ணெய் துளிக்கூடக் கிடையாதே! எப்படி வறுப்பேன்?" என்றாள் அவன் மனைவி.

"சரி, அப்படியானால் அதை வேக வைத்துச் சாப்பிடுவோம்" என்றான் புருஷன்.

"வேகவைப்பதற்கு விறகோ, கரியோ ஒன்றும் கிடையாதே" என்று பதில் வந்தது.

"சரி, கொஞ்சம் காடியை வைத்துக் கொண்டு மீனைப் பச்சையாகவே தோய்த்துப் புசிப்போம்" என்றான் புருஷன்.

"காடியும் இல்லையே" என்று பதில் அளித்தாள் மனைவி.

இந்தப் பதிலைக் கேட்ட புருஷன் அலுத்துப் போய், கொண்டு வந்த மீனைத் திரும்பக் கொண்டுபோய் கடலில் போட்டான். மீன் ஜல மட்டத்துக்கு மேல் தலையைத் தூக்கி "முஸோலினி வாழ்க!" என்று கூறிவிட்டு அப்பால் நீந்திச் சென்று விட்டது.

—

விமான மோட்டும் யந்திர 'மனிதன்' ஒன்றைப் பிரிட்டிஷார் தயாரித்துவிட்டார்கள். சில மாதங்கட்கு முன் இம் 'மனிதன்' ஜர்மனிமீது விமான மோட்டிச் சென்று குண்டெறிந்து திரும்பினனாம்.

## "ஹிட்லர் ஆயுதங்களைக் கொண்டே அவரைத் தோற்கடிக்க வேண்டும்"

★

### ஸர் சி. வி. ராமன் பிரசங்கம்

"யுத்தம் ஒரு தீமைதான். ஆனால் நாம் யுத்தத்தை ஆரம்பித்துவிட்டால், எதிரியின் சக்தி அழிவது வரை குரூரமாக நடத்தவேண்டியதுதான். ஹிட்லர் வெற்றி பெறுவதன் காரணம் அவர் ஈவிரக்கமின்றிப் போரிடுவது தான். அவரைத் தோற்கடிக்க ஒரே வழி, அவரைப்போன்று குரூரமாகப் போரிடுவதே. யுத்தத்தில் மன உருக்கத்துக்கு இடமில்லை. யுத்தத்தை முடித்துவிட்டு அப்பால் மதத்துக்கும், அஹிம்சைக்கும் செல்வோம்" என்று பெங்களூரில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் ஸர் ஸி. வி. ராமன் பேசினார். அவர் மேலும் குறிப்பிட்டதாவது:—

யுத்தம் மனிதனுடைய பழமையான வேலைகளில் ஒன்று. அதற்கும் விஞ்ஞானத்துக்கும் சம்பந்தமில்லை. அது விஞ்ஞானத்தைவிடவும் அதிகப் பழமையானது. போரிடுவது மனித சரித்திரத்தில் திரும்பத் திரும்ப நடைபெறும் சம்பவமாகும். யுத்தத்துக்காக விஞ்ஞானிகளைக் குறைகூறக் கூடாது; ஏனெனில் எந்த தேசத்திலும் விஞ்ஞானிகள் கையில் அதிகாரம் இருந்ததில்லை.

இந்த உலகப் போரில் இந்தியாவின் நிலைமை என்ன? எங்கும் அன்பைப் பற்றிப் பேசப்படுகிறது. அஹிம்சை, புத்தர் என்றெல்லாம் சொல்லப்படுகிறது. புத்தருடைய லட்சியங்கள் மீது எனக்கு அதிக மதிப்புண்டு. ஆனால், மிகப் பழமையான நாகரிகமுடைய சைனாவுக்கு இந்த லட்சியங்கள் எவ்வாறு உதவின? மதம், உயர்ந்த லட்சியங்கள் இவைபற்றிப் பேசுவது நாமே. ஆனால் யுத்தத்தில், நம் மனதுக்கு வெறுப்பான உண்மை நிகழ்ச்சிகளை எதிர்த்துத்தான் ஆகவேண்டியதிருக்கிறது. எந்த தேசமும் பிற தேசத்தைத் தாக்கக்கூடாது: ஆனால் பிற தேசந்தாக்கினால் அதைக் குரூரமாக எதிர்க்கவேண்டியதுதான். யுத்தத்தில் விஷவாயு உபயோகிக்கப்படுவதை ஜீவகாருண்யமற்ற முறையென ஜனங்கள் சொல்கிறார்கள். ஏன்? போரிட நேர்ந்தால், விஞ்ஞானத் திறமையுடன் போரிட்டு. குண்டு போட்டோ, பீரங்கிகளாலோ கொல்வதைவிட விஷவாயுவால் கொல்வது கொஞ்சம் ஜீவகாருண்ய முடையது என்று ஒரு அமெரிக்க விஞ்ஞானி சொல்லியிருக்கிறார். குரூரமாகப் போரிடும் ஹிட்லரை, அவரது ஆயுதங்களுடனே போரிட்டுத் தோற்கடிக்கவேண்டும்.

### தீவுப் பட்டணங்கள்

சிறு தீவுகளின் மேல் கட்டப்பட்ட பட்டணங்கள், வெனிஸ், ஆம்ஸ்டர்டாம், காண்ட் என்பவை. வெனிஸ் 118 சின்னஞ் சிறு தீவுகளின் மேல் நிர்மாணிக்கப்பட்டு 378 பாலங்களால் இணைக்கப்பட்ட நகரம். ஆம்ஸ்டர்டாம் 100 தீவுகளின் மேல் 300 பாலங்களால் ஆக்கப்பட்டிருக்கிறது. காண்ட் நகரம் 26 தீவுகள், 270 பாலங்கள் இவைகளின் மேல் நிற்கின்றது.

### அவன் முப்பாட்டன்

108 வயதுடைய ஒரு சீன வியாபாரி யூஷி என்ற பட்டணத்தில் வந்திருக்கிறான். அவனுடன் அவனது மகனும் பேரனும் கூட வந்திருக்கிறார்கள். பேரனுக்கு 70 வயது; மகனுக்கோ 90 வயதாகிறது. என்ன! மூவரும் பாட்டனாவதற்குத் தகுதியான வயதுதானே!

## பிலிம் தணிக்கை போர்டு

போலீஸ் கமிஷனர், சென்னை கோட்டை ஸ்டேஷன் ஸ்டாப் ஆபீசர், ராவ்பகதூர் யம். ஸி. ராஜா யம். யல். ஏ., ஸ்ரீமதி டி. யல். ஆர். சந்திரன், ஸ்ரீமதி குரியன், டாக்டர் யு. கிருஷ்ண ராவ், திவான்பகதூர் கே. தேவசிகாமணி முதலியார், ஸ்ரீமான்கள் யஸ். வி. விஜயராகவாச்சாரியார், வி. வெங்கடேஸ்வர சாஸ்திருலு, பி. பாலசுப்ரமண்யம், ஜி. ஜானகிராம் செட்டியார், அப்துல் லத்திப் பருக்கி, ஸி. சாம்பசிவராவ், ஜி. ராமப்ரமம், ஜி. இ. வாக்கர், மகமத் யூசுப் ஸேட், அஸ்கர் அலி ஆகியோரை அடுத்த வருஷத்துக்கு பிலிம் தணிக்கை போர்டு மெம்பர்களாகச் சென்னை சர்க்கார் நியமித்திருக்கின்றனர்.

### வர்த்தக ஸ்தலங்களில் ரேடியோக்கள்

லாபத்தைக் கருதியோ, ஹோட்டல்களிலோ அல்லது இதர வர்த்தக ஸ்தலங்களிலோ (ரேடியோ வியாபார ஸ்தலங்கள் உள்பட) அல்லது வியாபார விளம்பர வண்டிகளிலோ வைக்கப்படும் ரேடியோ ஸெட்டுக் குரிய லைசன்ஸுகளின் கட்டணம் 1942 ஜனவரி முதல் தேதியிலிருந்து ரூ 25 ஆக இந்திய சர்க்கார் நிர்ணயித்திருக்கிறார்கள். ஒவ்வொரு ரேடியோ ஸெட்டுக்கும் ஒரு ஒலிபெருக்கி (லவுட்ஸ்பீக்கர்) வைத்துக் கொள்ளலாம். மேற்கொண்டு ஒவ்வொரு ஒலி பெருக்கிக்கும் ரூ 10 வீதம் கூடுதல் கட்டணம் கட்ட வேண்டும்.

## செட்டியார்கள் வர்த்தக சங்கம் மூவார்

### ஏழாவது ஆண்டு நிறைவு விழா

விசு வருஷம் ஐப்பசி மாதம் 15உ வெள்ளிக்கிழமை (31-10-41) பிற்பகல் 3 மணிக்கு மூவார் நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் வர்த்தக சங்கத்தின் ஏழாவது ஆண்டு நிறைவு விழாப் பொதுக்கூட்டம் சங்கக் கட்டிடத்தில் கூடியது. அங்கத்தினர்களும் இதர அன்பர்களுமாக சுமார் 60 பேருக்கு மேல் விஜயம் செய்திருந்தனர். சங்கத்தலைவர், திரு. பெ. சித. வி. அண்ணாமலை செட்டியார் அவர்கள், திரு ப. வ. ராம. முத்துப்பழனியப்ப செட்டியார் அவர்களால் அழகிய மலர்மாலை அணிவிக்கப் பெற்று, கரகோஷத்தினிடையே எழுந்து முன்னுரையாகப் பின்வருமாறு பேசினார்கள்:—

"நமது வர்த்தக சங்கம் ஆரம்பிக்கப்பட்டு இன்றுடன் ஏழு வருடங்கள் ஆகின்றன. நமது சமூக விஷயங்களையும், பொருளாதார நன்மையையும், நமது தொழில் அபிவிருத்தியையும் இச்சங்கம் தன்னாலியன்ற வரையில் அவ்வப்போது கவனித்து வேண்டியதைச் செய்துவந்திருக்கிறது. யுத்தகாலத்தில் பொதுஜனங்களின் நன்மைக்காக இந்நாட்டில் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் அநேக விதமான சட்டதிட்டங்கள் ஏற்படுத்திப் பல வழிகளில் மக்களுக்கு இடைஞ்சல் ஏற்படாமல் பாதுகாத்து வருகின்றனர். உணவுப் பொருள் கட்டுப்பாட்டுச் சட்டம் ஒன்று இதுவரையும் இல்லாதிருந்தால் உண்ணும் உணவுக்கும் உடுக்கும் உடைக்கும் எவ்வளவு கஷ்டம் ஏற்பட்டிருக்குமென்பதைச் சிறிது கவனித்துப்பாருங்கள். இந்தியாவுக்கும் இதர நாடுகளுக்கும் கப்பல் போக்குவரத்து வசதியைக் கவனித்தால், உலகம் யுத்தத்தில் மாட்டிக்கொண்டு கொந்தளிப்பாகவிருக்கும் இச்சமயத்தில் நாம் எல்லோரும் எப்பொழுதும் போல் நமது தாய்நாட்டுடன் கடிதப்போக்குவரத்து, தந்தி மூலமாகச் செய்திகள் அனுப்புவது, உண்டியல் மாற்றும் முறைகள் இன்னும் இது [illegible] இன்னும் [illegible] நடந்து வருகிறோம். பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுக்கு இறுதியில் வெற்றி கிடைக்க வேண்டுமென்றும் பலாத்காரமும் அதர்மமும் அடிப்படையாகக் கொண்ட ஹிட்லர் ஆட்சிமுறை அடியோடு ஒழிந்து உலகத்தில் மக்கள் நீதியுடன் சமாதானமாக வாழ வேண்டுமென்றும் ப்ரார்த்திப்போமாக.

காரியதரிசி, திரு. சு. ப. தெ. இராமனுதன் செட்டியார் அவர்களால் ஏழாவது ஆண்டின் அறிக்கையும் வரவு செலவுக் கணக்குகளும் வாசிக்கப்பெற்றன. அடியிற் குறிப்பிட்டுள்ளவர்கள் எட்டாவது வருடத்திற்கு சங்க உத்தியோகஸ்தர்களாகவும் நிர்வாக சபை அங்கத்தினர்களாகவும் ஏகமனதாகத் தேர்ந்து எடுக்கப் பெற்றனர். திருவாளர்களான கரு. பெ. சொக்கலிங்கம் செட்டியார், தலைவர்; மு. அழ. சுப. சுப்பையா செட்டியார் உபதலைவர்; சு. சொ. கருப்பன் செட்டியார் காரியதரிசி; சொ. வி. ராம. வி. மாணிக்கம் செட்டியார் உதவிக் காரியதரிசி; பழ. ப. சிதம்பரம் செட்டியார் கணக்குப் பரிசோதகர்; அள. அள. சுப்பிரமணியன் செட்டியார் பொக்கிஷதார். நிர்வாகசபை அங்கத்தினர்கள்: திருவாளர்கள் சா. ஈ. சிவ. கருப்பஞ் செட்டியார், ப. வ. ராம. முத்துப்பழனியப்ப செட்டியார், வயி. சொ. வயிரவன் செட்டியார், சு. மு. ராம. ஆண்டியப்ப செட்டியார், மு. பழ. பழனியப்ப செட்டியார், நா. வ. நா. முத்துராமன் செட்டியார், யெ. ப. நா. யே. சுப்பிரமணியன் செட்டியார், வீர. கும. அளகப்ப செட்டியார், சி. மு. மு. அரு. அண்ணாமலை செட்டியார், சித. மு. வினைதீர்த்தான் செட்டியார், முரு. பள. முருகப்ப செட்டியார்.

மகாசபைக் கூட்டத்தில் கோலாலம்பூர் மலாய்நாட்டுச் சொந்தத் தோட்டக்காரர் சங்கத்துக்கு நமது சங்கத்தின் பிரதிநிதியாக திரு சித. மு. வினைதீர்த்தான் செட்டியார் அவர்களைத் தேர்ந்து எடுக்கப் பெற்றது. திரு. சு. ப. நா. மு. ஆ. காளிலிங்கம் பிள்ளை அவர்கள், "ஒற்றுமை" என்பதுபற்றி, அனேக மேற்கோள்களுடன் அழகாகப் பேசி சபையோரை மகிழ்வித்தார்கள். புது வருடத் தலைவருக்கும்

[4-ம் பத்தி பார்க்க]





## சத்தியாக்ரகியின் அபராதம்

### சொத்தை ஜப்தி செய்யலாமா?

தூத்துக்குடி சத்யாக்ரஹக் கைதியாகச் சிறையில் வைக்கப்பட்டு தண்டனை காலத்தையும், அபராதம் செலுத்தாததற்காக அனுபவிக்க வேண்டிய சிறை வாசத்தையும் அனுபவித்துவிட்டு சமீபத்தில் விடுதலையாகி வெளிவந்த ஸ்ரீ அ. மாசிலாமணி பிள்ளையின் சொத்துக்களை, அபராதத் தொகைக்காக ஜப்தி செய்ய அனுமதிக்க வேண்டுமென்று சர்க்காரால் ஜில்லா முன்சீப் கோர்ட்டில் தாக்கல்செய்யப்பட்ட மனுவை ஜில்லா முன்சீப் ஸ்ரீ வ. நாகசாமி அய்யர், அனுமதிக்க மறுத்துவிட்டார். ஸ்ரீ மாசிலாமணிப் பிள்ளையைத் தண்டிக்கும்போது கோவில்பட்டி ஜாயிண்ட் மாஜிஸ்திரேட் அவருக்குத் தண்டனையுடன் ரூ. 200 அபராதமும் விதித்தார். அபராதம் செலுத்தத் தவறியதால் அனுபவிக்க வேண்டிய சிறைவாசத்தை அனுபவித்த பின்னர், இது சிவில் டிக்ரி என்றும், எனவே இத்தொகை வசூலிக்கப்படவேண்டும் என்றும் கலெக்டரின் உத்தரவின் பேரில் இம்மனு தாக்கல் செய்யப்பட்டது. இது சம்பந்தமாக இரு தரப்பு வாதங்களையும் கேட்டபின்னர், ஜில்லா முன்சீப் பம்பாய் வழக்கொன்றில் கூறப்பட்ட தீர்ப்பை ஆதாரமாக வைத்துக்கொண்டு இச்சட்டத்தின் ஷரத்துகள்படி இரு தண்டனைகள் விதிக்க இடமில்லையென்று கூறி மனுவை நிராகரித்துத் தீர்ப்புக் கூறினர்.

### தோட்டத்தொழிலாளரும், அரிசியும்

இலங்கையில் தோட்டப்பகுதித்தொழிலாளர்களுக்கு அளிக்கப்படும் அரிசியைக் கட்டுப்படுத்தும்படியாக ஏற்படலாம் என்றும், இப்பிரச்னை சம்பந்தமாகத் தொழில் நிர்வாகக் கமிட்டியில் ஆலோசிக்கப்பட்டதாகவும் தெரியவருகிறது.

[1-ம் பத்தித் தொடர்ச்சி]

காரியதரிசிக்கும் மாலைகள் அணிவிக்கப் [illegible] நன்றி செலுத்தினர். மகாசபைத் தலைவர் முடிவுரையுடன் வந்தனோபசாரம் கூறப்பெற்றுக் கூட்டம் மாலை 6-30 மணிக்கு இனிது நிறைவேறியது.

### அறிக்கை விவரம்

ஷை சங்கத்தில் சென்ற வருடம் 80 அங்கத்தினர்கள் இருந்தனர். ஜோகூர் சர்க்கார் ஸ்டேட் செக்ரட்டரியின் விருப்பத்திற்கிணங்கி, செட்டியார் ஹாலை கோதுமை மாவு முதலிய சாமான்கள் சேகரித்து வைப்பதற்காக வாடகையின்றி சர்க்காருக்கு விட்டுக் கொடுத்திருப்பதற்கு சர்க்கார் நன்றி தெரிவித்துப் பாராட்டியிருக்கின்றனர். சங்கப் புத்தக சாலையில் 424 புத்தகங்கள் இருக்கின்றன. பல ஆங்கில, தமிழ் பத்திரிகைகள் வரவழைக்கப்படுகின்றன. 7வது ஆண்டில் சங்கத்திற்கு சந்தா முதலிய இனங்களில் மொத்த வரவு 1675 வெள்ளி 84 காசு. முன் இருப்பு 100 வெள்ளி. செலவு 1628 வெள்ளி 25 காசு.





## பர்மாவில் அரிசி உற்பத்தி

### ஏற்றுமதியில் முதல் ஸ்தானம்

(மௌங் டிங் யீ)

உலகத்தில் அரிசி விளையும் நாடுகளில் சீனா முதல் ஸ்தானத்தையும், இந்தியா இரண்டாவது ஸ்தானத்தையும் பெற்றிருக்கின்றன. ஆயினும் அரிசி ஏற்றுமதி செய்யக்கூடிய நாடுகளில் பர்மா முதல் ஸ்தானத்தையும், இந்தோ-சைனா இரண்டாவது ஸ்தானத்தையும், தைலாண்டு மூன்றாவது ஸ்தானத்தையும் பெற்றிருக்கின்றன. கீழ்க்கண்ட புள்ளி விவரங்கள் இவ்வருஷத்தில் அம்மூன்று தேசங்களில் தங்களுடைய தேவைக்கு அதிகமாக விளைந்திருக்கும் அரிசியை டன் கணக்கில் குறிப்பிடுகின்றன:

| | |
|---|---|
| பர்மா | 3,300,000 டன் |
| இந்தோ-சைனா | 1,500,000 ,, |
| தைலாண்டு | 1,200,000 ,, |

1886ம் வருடத்தில் பர்மாவில் நெல் வெள்ளாண்மை செய்யப்பட்ட நிலப்பரப்பு 29 லட்சம் ஏக்கராகவிருந்தது. ஆயினும் 52 வருடங்களுக்குள் அதாவது 1938 வருடத்தில் 12,820,000 ஏக்கர்களாகிவிட்டது. பர்மாவில் நவதானியங்கள் பயிர்செய்யப்படும் நிலப்பரப்பு மொத்தத்தில் (1937-வருடக் கணக்குப்படி) 19,304,907 ஏக்கராகும். பர்மா அரசாங்கப் பொக்கிஷம் வருடமொன்றுக்கு சுமார் 15-க்கு மேல் 16 கோடி ரூபாய் வரை வருமானம் உடையது. அம்மொத்த வருமானத்தில் நில வரிமட்டும் 37,805,009 ரூ. ஆகிறது. 1938-ம் வருடத்தில் பர்மாவில் 12,820,000 ஏக்கர் நிலங்களிலும் மொத்தம் 16,08,90,000 கூடை நெல் விளைந்திருக்கிறது. அதாவது 53,63,000 டன் அரிசியாகும். ஷை மொத்த நெல் விளைவின் 17 சத விகிதம் விதை நெல், சாப்பாட்டு நெல் முதலியவற்றிற்காக விவசாயிகளால் ஒதுக்கிவைக்கப்படுகிறது. மற்றும் 23 சத விகிதம் உள்நாட்டு உபயோகத்திற்காகி வருகிறது. எனவே உள்நாட்டில் செலவாகும் அரிசி 40 சத விகிதமாகும். அதாவது 21,65,000 டன் அரிசி யெனலாம். (மற்றோர் வகையில் கணக்கெடுத்துப் பார்ப்போமானால் பர்மாவில் ஆளொன்றுக்கு வருடமொன்றுக்கு 231 பவுண்டு அரிசிக்குச் சிறிது மேலாகச் செலவாகிறது.) அவ் வருடம் பர்மாவிலிருந்து 31,98,000 டன் அரிசி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கிறது. எனவே பர்மாவின் மொத்த விளைவில் 60 சத விகிதம் வெளிநாடு [illegible] 1938-ம் [illegible] சம்பந்தமான பொருள் வகைகளை ஏற்றுமதி செய்யப்பட்டதில் இருந்து 21,18,67,551 ரூபாய் பர்மாவுக்குக் கிடைத்ததென ஓர் கணக்கு கூறுகிறது.

பர்மாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் அரிசி— இந்தியா, சீனா, ஜப்பான் முதலிய கீழ்நாடுகளுக்கும் இங்கிலாந்து முதலான மேல் நாடுகளுக்கும் செல்கிறது. பர்மாவின் மொத்த அரிசி ஏற்றுமதியில் 11,98,000 டன் அரிசி இந்தியாவில் மட்டும் இறக்கப்பட்டிருக்கிறது. இந்தியா உலகத்தில் அரிசி விளையும் தேசங்களில் இரண்டாவது ஸ்தானம் வகித்தாலும் தன்னுடைய மொத்த விளைவு ஜனத் தொகைக்குப் போதாமையால் வருடம் ஒன்றுக்கு சுமார் 1,500,000 டன் அரிசி இதர நாடுகளிலிருந்து இறக்குமதி செய்கிறது. இதில் இந்தியா தனக்குத் தேவையான அரிசியை ஏறக்குறைய பர்மாவினிடமிருந்தே பெற்றுக்கொள்கிறதெனலாம். பர்மா அரிசியை இந்தியாவுக்கு அடுத்து அதிகமாக வாங்குவது சீனா தேசம். சீனா உலக அரிசி விளையும் நாடுகளில் முதல் ஸ்தானம் வகித்தாலும், இந்தியாவைப் போன்றே, தன்னுடைய அரிசி விளைவு தனது 45 கோடி மக்களுக்கும் போதாமையால் இதர நாடுகளிலிருந்து வாங்கவேண்டியிருக்கிறது. பர்மா அரிசியை வாங்கும் நாடுகளில் மேல் நாடுகளுக்கு மூன்றாவது ஸ்தானத்தைக் கொடுக்கலாம்.

பர்மாவின் அரிசி வியாபாரம் பெரும்பாலாக இந்தியர்கள், ஆங்கிலேயர், சீனர்கள் ஆகிய மூன்று வர்க்கத்தாராலேயே நடத்தப்படுகிறது. இதனைப் பார்த்து பர்மியர் விசனிக்கலாம்; பெருமூச்சடையலாம். ஆயினும் மேற்கூறப்பட்ட 3 சமூகத்தினர் ஏற்றுமதி இறக்குமதித் தொழிலின் பலாபலன்களை நன்கு அறிந்திருப்பது; அத் தொழிலிலே அடிபட்டு அனுபவம் வாய்ந்திருப்பது; மேலும் பர்மாவின் ஏற்றுமதி அரிசி அச் சமூகத்தார்களின் தாய்நாடுகளிலிறக்குமதி செய்யப்படுவது; பர்மியரின் தொழிலனுபவமில்லாமை: தம்மிடமிருக்கும் மூலதனத்தை ஓர் தொழிலில் போட்டால் துரதிர்ஷ்டவசமாக எங்கே நஷ்டமேற்பட்டுவிடுமோவென அஞ்சுவது முதலிய காரணங்களாலேயே சுமார் 20 கோடி ரூபாய்க்கு மேலான பர்மா அரிசி ஏற்றுமதித் தொழிலானது மேற்கூறிய மூன்று சமூகத்தினரின் கையிலகப்பட்டிருக்கிறது.

பர்மாவைப் போலவே இந்தியாவிலும் விளைபொருள்களிடையே அரிசி முதல் ஸ்தானம் வகிக்கிறது. இந்தியாவின் நெல் பயிரிடப்படும் நிலப்பரப்பு 76,260,000 ஏக்கர்களுக்குக் குறையாது. அதன் விளைவு ஏறக்குறைய வருடமொன்றுக்கு 290,00,000 டன் அரிசியாகும். அதாவது 27,60,000,000 ரூபாய் பெறுமானமாகும். இந்தியா வருடமொன்றுக்கு சுமார் 132,500,000 ரூபாய்க்கு இதர நாட்டு அரிசியை வாங்குகிறது. பர்மாவோ வருடமொன்றுக்கு சுமார் 21 கோடி ரூபாய்க்கு அரிசி விற்கிறது. பர்மா பெறும் 21 கோடி ரூபாயில் சுமார் அரைவாசி இந்தியாவினிடமிருந்து கிடைத்ததாகும். இதனைக் கூர்ந்து நோக்கும்போது, பர்மா அரிசி ஏற்றுமதியில் இந்தியர் அதிகப் பங்கெடுத்துக்கொண்டிருப்பது அதிசயிக்கத்தக்கதல்ல.

பர்மாவின் பொருளாதார நிலை அரிசியையே அடிப்படையாகக்கொண்டிருக்கிறது. 1930-ம் வருடம் தொடர்ந்து நெல் விலை திடீரென இறங்கியதால் பர்மாவின் பொருளாதார நிலை சீர்குலைந்து சில செல்வந்தர்கள் திடீரென ஏழைகளானது வாசகர்கள் ஞாபகத்திலிருக்கலாம்.

மற்றும் பர்மாவாழ் சுய தேச மக்கள் பெரும்பாலும் நெல் பயிர் செய்வது சம்பந்தமான தொழிலிலேயே ஈடுபட்டிருக்கிறார்கள். பர்மாவின் 1931ம் வருட ஜன சங்கியைப்படி 32,387 கிராமங்களில் 2,825,755 குடிசைகளில் 11,078,924 மக்கள் வசிக்கிறார்கள். இவர்களின் தொழில் விவசாயமே. இவர்களின் உயிர் நிலையானது பெரும்பாலாக நெல் பயிரிலேயே அமைந்திருக்கிறது. பர்மிய ஜனசங்கியைப்படி பர்மா ஜனத் தொகையின் 91·75 சத விகித மக்கள் கிராமங்களிலே வசிக்கிறார்கள்.

பர்மாவின் 92 நகரங்களில், 3,14,668 வீடுகளில் 15,26,925 ஜனங்கள் வசிக்கின்றனர். அதாவது பர்மா ஜனத்தொகையின் 8·25 சத விகிதமே நகரங்களில் வசிக்கிறார்கள். (ஜனத்தொகைப் புள்ளியில் ஷான் பிரதேசத்தின் ஜனத் தொகையான 1,529,370 ஒதுக்கிவிட்டிருக்கிறோம்.)

இனி நிலங்களின் விநியோகிப்பை நோக்குவோம். பர்மாவின் நவதான்யம் விளையும் நிலப்பரப்பு 1926-ம் வருடத்தில் 18,271,818 ஏக்கர்களாகும். இந்நிலப்பரப்பில் 14,799,950 ஏக்கர்கள் விவசாயிகளிடமும் 3,471,868 ஏக்கர்கள் விவசாயிகள் அல்லாதாரிடமுமிருந்தன. 1937ம் வருடத்தில் மொத்தநிலப்பரப்பு 19,304,907 ஏக்கர்கள். இந் நிலப்பரப்பில் 1,28,62,874 ஏக்கர் விவசாயிகளிடமும் 644,20,33 ஏக்கர்கள் விவசாயிகள் அல்லாதாரிடமும் இருந்தன. அதாவது மேற்படி 12 வருட காலத்திற்குள் விவசாயிகளின் நிலங்களில் 20 லட்சம் ஏக்கர் குறைந்து அதே காலத்தில் 30 லட்சம் ஏக்கர்கள் விவசாயி அல்லாதாருக்குப் பெருகியிருக்கின்றன. இதன் காரணம்தான் என்ன? 1930ம் வருடத்தில் நெல் விலை திடீரென இறங்கியதுதான் மூல காரணமாகும். பொருளாதார நிபுணர்களின் புள்ளி விவரப்படி அதிகமான நிலங்கள் விவசாயிகளிடமிருந்து விவசாயி அல்லாதாரிடம் சென்றுவிட்டதனால் தேசப்பொருளாதார நிலை குன்றியிருக்கிறதெனச் சிலரால் கருதப்படுகிறது. ஆனால் இவர்கள், தேச மக்கள் தங்களின் வாழ்க்கைச் செலவைச் (Cost of living) சிக்கன முறையில் நடத்த வேண்டுமென்பதையும் அறிந்துகொள்ள வேண்டும். தங்களின் பொருளாதார நிலை குன்றியிருக்கும்போது தாங்கள் வாழ்க்கை ஸ்திதியில் (Standard of living) உயர்ந்தவர்கள் என்று பெருமையடித்துக்கொண்டிருப்பதனால் மட்டும் தேசத்தின் பொருளாதார நிலை உயர்ந்துவிடாது என்பதைத் தேச மக்கள் ஒவ்வொருவரும் அறிந்துகொள்ள வேண்டும்.

(தனவணிகன்)

## பம்பாய் வாசிகளின் இட்டலிப் பிரேமை

### உணவுச் சத்து இட்டலியில் இல்லையா?

"இயற்கை வாழ்வு" (The Life Natural) என்ற பத்திரிகையின் அக்டோபர் பிரதியில் வடநாட்டார்களும் இட்டலி சாப்பிட ஆரம்பித்து [illegible] அரிசி உளுந்து கலப்பதற்கு முன்பே அரிசி ஊற வைக்கப்பட்டுவிடுவதால் அது தாமஸ உணவு என்றும், அதில் வைட்டமின் ஒன்றும் இல்லாததால் அது உணவு என்று சொல்லக்கூடிய அளவுக் கில்லையென்றும், அது வியாதியையும், விஷச்சத்துக்களையும் உண்டாக்கக் கூடியதாக இருப்பதாகவும் அந்தப் பத்திரிகை எழுதுகிறது. அது மேலும் எழுதுவதாவது:- "ஆனால் இட்டலி மற்ற மாகாணங்களிலும் பரவ ஆரம்பித்திருக்கிறது. அது இப்போது பம்பாயில் காலூன்றிவிட்டது; மதராஸியல்லாதவர்களும் அதனிடத்தில் பிரேமை கொண்டுவிட்டார்கள். வடக்கே ராஜமகேந்திரத்திற்கும் அப்பாலும் அதன் வியாபகம் இருக்கிறது."

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

## வால்டர் பேடரும் வசன நடையும்

★

பிரச்னையை முடிவில் தீர்ப்பதாகும். கருத்தும் சொல்லும் கவ்வியணைவது—காதற் சனலுடன் கூடி ஜொலிப்பது—இதுவே சொல்லன்பின் முடிவு. (Blake) பிளேக்கின் கவிதையில், கருத்தும் சொல்லும், ஆன்மாவும் உடலும் போல் கூடிக் குதிக்கின்றன. கருத்தும் சொல்லும், பிரிக்க முடியாத ஓர்மையைப் பெற்றிருக்கின்றன. எண்ணமும் மொழிக் கவசமும் பிரித்தால் உடையும், நொறுங்கும். சிலருக்கு நடை விரைவில் தோன்றும்: அது உட்பிரவாகத் தோற்றம். சிலருக்கு நடை மெதுவாகவே அமையும். ஆனால் நடைப் பிழையைக்கண்டு திருத்தி, மொழி ஜோதியைச் சிருஷ்டிக்கவேண்டும்.

ஒரு சொல்லின் சிற்பத் தோற்றம், இலக்கிய உள்ளத்திற்கே நன்கு புலனாகும். "என் காது சுத்தமாக சப்த அலைகளைப் பிடித்தாலும், அந்த கீதத்தை வீணையில் திரும்ப அமைக்க சக்தியற்றவன் போல் தவிக்கின்றேன்" என்று நடை பழகும் பிளாபர்ட் (Flaubert) உணர்ச்சியுடன் கூறுகின்றான். உள்ளொளியினின்று ஒருவன் எழுதினால் படிப்பவனுக்கும் அகக்கண் அருள் வேண்டும்! உள்ளொளியே வெளி மொழியாக, மொழி பெயர்க்கப்பட்டு வருகின்றது. அதுவே சங்கதச் சிகரம்: உட் பிரவாகமே காவிய கங்கையாக உதிக்கின்றது. பிளாபர்ட்டின் தன்னடக்க நடை, உண்மை யழகை இரட்டித்துக் காட்டுகின்றது. "நடையே மனிதன்" (Style is the man) என்ற இலக்கியப் பழமொழி இவ்வாறே தோன்றிற்று. எவ்வகையிலும் நடையின் இலட்சியம், உண்மை விளக்கமே. மனப்படம் மொழிப் படமாகப் பிரதிபலிக்கின்றது.

சங்கீதமும் வசன இலக்கியமும் வெவ்வேறு கலைப்பகுதிகளானாலும், சங்கீதச் சிகரத்தில் இலக்கிய விமர்சனம் ஐக்கியமடையலாம். நற்கலை பெருங்கலையாகாது: விஷயத்தில் வித்தியாசமுண்டு. விஷயச் சிறப்பால் தாக்கரே (Thackeray) எழுதிய 'எஸ்மண்டு' (Esmond), அவரே எழுதிய வானிடி பேர் (Vanity Fair) என்னும் நாவலைவிடச் சிறந்தோங்கியது. டிவைன் காமடி (Divine Comedy), சுவர்க்க நீக்கம் (Paradise Lost), ஏழை படும்பாடு (Les Miserables), வேதப் புஸ்தகம் (Bible)—முதலிய உயர்ந்த நூற்கள், பெருங்கலையாக விளங்கிப் பொலிகின்றன. இவ்வுலகில் நமது வாழ்க்கையின் சிறப்பை வளர்க்கும் தன்மையிருந்தால், தாந்தேயின் (Dante) நூல் இறைவனின் சிருஷ்டிச் சிறப்பையும் கூட்டும். மனித வாழ்வில், ஆன்மப் பொக்கிஷமாய் விளங்குவது, இலக்கிய மொழிச் சிகரமேயாகும். சொற்சிலம்பாடுவோன், சொல்லின் செல்வனே.

(முற்றிற்று)



## குனியும்போது என் பிராணனே போய்விடும்

### முதுகு வலியினால், 31 வயதிலேயே கிழத்தனம் வந்துவிட்டது

இந்த மனிதனுக்கு வயது 31. ஆயுளில் மேலான வாழ்க்கைக்குரிய காலம். ஆனால் பல மாத காலமாக மூத்திரக் காய் உபத்திரவத்தினால் வயோதிக நிலைமைக்கு வந்துவிட்டான். இது சமயம் குருஷன் சால்ட் சாப்பிட்டதால் எங்ஙனம் மீண்டும் திடகாத்திரம் பெற்றானென்பதை கீழே சொல்லுகிறான்: கேளுங்கள்!

"மூத்திரக் காய் உபத்திரவத்துடன் பத்து வருஷமாக ஆஸ்பத்திரியில் கிடந்தேன். திரும்பி வரும்போது, என் வயது 31 ஆனபோதிலும் வயோதிகனைப் போலானேன். எந்தக் காரியத்திற்கும் குனித்தேனானால், மீண்டும் நிமிர்வதற்குள் என் பிராணன் போய்விடும். சிலர் சிபார்சு செய்ததின் பேரில் 'குருஷன் சால்டை சாப்பிட ஆரம்பித்தேன். உபத்திரவம் தணிந்தது. எவ்விதத்திலும் குணமாகவேயிருந்தது. நான் தினசரி வேலைக்குப் போவதும் திரும்புவதும் ஆக 28 மைலும் சைக்கிளில் தான். தினசரி ஒழுங்காக குருஷன் சால்ட் சாப்பிடுகிறேன். இப்போது தினசரி வேலைக்குப் போய்வருவதுடன் மட்டுமல்ல, இரவிலும் வேலை செய்யக் கூடும். அதனால் அலுத்துப் போய்விட மாட்டேன்."

S. V. C.





### செட்டியார்கள் வர்த்தக சங்கம், பினங்கு

சென்ற ஐப்பசி மாதம், 11-ந் தேதி (27-10-41) திங்கட்கிழமை மாலை 5 மணிக்கு 8-வது வருஷ ஐந்தாவது நிர்வாக சபைக் கூட்டம், சங்கச் சபா மண்டபத்தில் தலைவர் திரு. பழ. சுப. சாமிநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 16 அங்கத்தினர்கள் விஜயஞ் செய்திருந்தனர். முந்தின நிர்வாக சபைக் கூட்ட நடவடிக்கைகளும் புரட்டாசி மாத வரவு செலவு கணக்குகளும் வாசித்துக் காண்பிக்கப் பெற்று, ஒப்புக் கொள்ளப் பெற்றன.

பினாங்கு உ. வீர. சேவு. அரு. கருப்பன் செட்டியா ரென்றிருப்பதை மாற்றி உ. வீர. சேவு. அரு. ராமநாதன் செட்டியாரெனவும், அ. கா. ராமசாமி செட்டியாரென்றிருப்பதை மாற்றி அ. கா. சிதம்பரம் செட்டியாரெனவும் பதிவு செய்து கொள்ளும்படி வந்த கடிதங்கள் அங்கீகரிக்கப் பெற்றன. கோல பிறை நிர்வாக சபை அங்கத்தினர் சா. மெ. அரு. மெ. முத்து பழனியப்ப செட்டியாருக்குப் பதிலாக ஷையூர் கண. சுப. காசிவிஸ்வநாதன் செட்டியாரவர்களைத் தேர்ந்தெடுக்கப் பெற்றது.

சுமார் 10 லக்ஷம் இந்தியர் ராணுவத்தில் சேவை செய்வதாக சமீபத்தில் லண்டனிலிருந்து வந்த செய்தி யொன்று கூறுகிறது.

## வட இந்தியர்கள் தமிழ் கற்க வேண்டும்

### மாணவர்களுக்கு ராஜாஜி யோசனை

சில தினங்கட்கு முன் அலாஹாபாத் சர்வகலாசாலை மாணவர் சங்கப் பொதுக் கூட்டத்தில் ராஜாஜி ஒரு சொற்பொழிவு நிகழ்த்திய போது வட இந்தியர்கள் தமிழ் கற்க வேண்டு மென்று சொன்னார். "இந்த சர்வகலாசாலை சங்கத்திலுள்ள ரொம்பப் பேருக்கு அகில இந்தியத் தலைவர்களாய் வர வேண்டுமென்று ஆசையிருக்கும். அவர்கட் கெல்லாம் நான் ஒன்று கூற விரும்புகிறேன். நீங்கள் ஏதாவதொரு தென்னிந்திய பாஷையைக் கற்க வேண்டும். நீங்கள் கொஞ்சம் தமிழ் கற்றுக் கொள்வது நல்லது. இது ஒரு நல்ல எதிர்த்தாக்குதலாயிருக்கும். ஆனால், இப்பொழுது நீங்கள் பத்திரிகைகளில் படிக்கும் எதிர்த்தாக்குதல்கள் போல் நான் வேடிக்கையாகச் சொல்லவில்லை" யென்று அவர் குறிப்பிட்டார்.

### வாலாஜாபாத் இந்து மத பாடசாலை: பெரியார்கள் வருகை

பாடசாலையின் விரதச்சாரி அணியைப் பார்வையிடுதற்காக உயர்திரு இராவ்பகதூர் டாக்டர் திருமூர்த்தி அவர்களும், அரசியல் அலுவாளர் தேர்வுக் கழக உறுப்பினர் உயர்திரு இராவ்பகதூர் எம். நரசிம்மம் பந்துலு அவர்களும் 16-11-41ம் நாள் வந்தார்கள். திரு. பந்துலு அவர்கள் தலைமையில் விரதாச்சாரி அணி விளையாட்டுகள் காண்பிக்கப்பட்டன. பின்னர் நடைபெற்ற கூட்டத்தில் தலைமை வகித்துப் பேசுகையில் "இப்பாடசாலை உண்மையான கல்வியைக் குழந்தைகட்கு அளிக்கிறது. சிறுவர்கள் உடற்பயிற்சியிலும் நல்லொழுக்கங்களிலும் சிறந்து விளங்குகிறார்கள். கடவுள் நம்பிக்கையோடு இங்குக் குழந்தைகள் வளர்க்கப்படுகிறார்கள்" என மகிழ்ந்து கூறினார். டாக்டர் திருமூர்த்தி அவர்கள் தாம் பல நாட்களாகக் கொண்டிருந்த ஆவல் நிறைவேறிற்று என்றும், இந்தப் பாடசாலை பிற எல்லாப் பாடசாலைகளுக்கும் முன் மாதிரியாக நடத்தப்படுகிறது என்றும் கூறி இது நன்கு சிறக்க வேண்டுமென்று வாழ்த்தினார். தென்னிந்திய விரதச்சாரி கழகத்தின் சர்வாதிகாரி சஞ்சீவி காமத் அவர்களும், அமைச்சர் G. D. நடராசன் அவர்களும் வந்திருந்தமை குறிப்பிடத் தக்கது.

### தேச பக்தர் வ. உ. சிதம்பரம் பிள்ளை திருநாள்

18-11-41ம் நாள் மாலை தலைமையாசிரியர் திரு. K. C. இராசகோபாலாசாரியார் பி. ஏ., எல். டி. அவர்கள் தலைமையில் வள்ளலார் மாணவர் இல்லத் தலைவர் கா. ப. தணிகை அரசு அவர்கள் சிதம்பரம் பிள்ளையின் பிறப்பு, செல்வம், தொண்டு, திறமை முதலியனபற்றிப் பேசினார்கள். தலைவர் தமது உரையில் பிள்ளையவர்கள் மனைவியாரும் உண்மைத் தேச பக்தியுடையவரா யிருந்ததை விளக்கினர்.

## ஆபாச விளம்பரத் தடைச் சட்டம்

### தொடுவாய் நாட்டில் அமுல்

சென்ற ஆகஸ்டில் தொடுவாய் நாட்டுச் சட்ட சபையில் நிறைவேற்றப்பட்ட ஆபாச விளம்பரச் சட்டம் தற்போது தொடுவாய் நாட்டில் அமுலுக்கு வந்திருப்பதாக மலேயா பிரசார இலாகா அறிக்கை விடுத்திருக்கிறது. ஷை சட்டப்படி தர்வியாதிகளைக் குணப்படுத்துவதாகவோ அல்லது அவைகளுக்குச் சிகிச்சை செய்யும் முறைகளையோ பத்திரிகை விளம்பரங்களிலோ துண்டுப் பிரசுர மூலமாகவோ, பொதுவிடங்களில் ஒட்டப்படும் விளம்பரங்களிலோ பிரசுரிக்கக்கூடாது. துர்வியாதிகளுக்கு நிவாரண முறைகள் அல்லது அவைகளைத் தடுக்கும் முறைகள் அச்சடிக்கப்பட்ட பிரசுரங்களும், அல்லது முறைகளைக் கொண்ட லேபிள்களும் ஷை சட்டத்தினால் பாதிக்கப்படும். அவைகளைப் பிரசுரிப்போருக்கு ஒரு வருட சிறைத் தண்டனையோ, 500 வெள்ளி வரை அபராதமோ அல்லது இரண்டுமோ விதிக்கப்படலாம். எழுதிய அல்லது அச்சடித்த ஆபாசமான விஷயங்களை அல்லது படங்களை எந்தப் பொது ஸ்தலத்திலும் ஒட்டுபவர்களுக்கு 50 வெள்ளி வரை அபராதமோ அல்லது ஒரு மாதச் சிறைத் தண்டனையோ அல்லது இரு தண்டனைகளுமோ விதிக்கப்படலாம். துர்வியாதிகள் சம்பந்தமான விளம்பரங்களும், ஆபாச விளம்பர இனத்தைச் சேர்ந்தவை யென்று கருதப்படுகிறது.

சர்க்கார் அல்லது பொது அதிகாரிகளால் பிரசுரிக்கப்படும் விளம்பரங்களுக்கும், மற்ற விதமான அறிக்கைகளுக்கும் விதிவிலக்குண்டு. சர்க்காரால் ஒப்புக் கொள்ளப்பட்ட வைத்தியர்களுக்கும், ஔஷதசாலைக்காரர்களுக்கும், மொத்த வியாபாரிகளுக்கும் தங்களுடைய தொழிலை முன்னிட்டு ஷை சட்டத்திலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கிறது. ஷை சட்டத்தை மீறும் எந்த நபரையும் ஒரு போலீஸ் அதிகாரி கைது செய்யலாம்.

### பிள்ளையார்பட்டி ஸ்ரீ முத்தழகு சத்தியாக்ரஹம்

நமது தாலூகாவில் 124 மைலும் மதுரை ஜில்லாவில் 33 மைலும் ஆக மொத்தம் 157 மைல்கள் நடந்து 96 கிராமங்களில் யுத்த எதிர்ப்புப் பிரசாரங்கள் செய்து மதுரை போய்ச் சேர்ந்திருக்கிறார்.





### பிரிவு உபசாரம்

செட்டி நாடு இராமகிருஷ்ண படையின் காரியதரிசியாக இருந்து அயல்நாடு செல்வதின் நிமித்தம் ராஜிநாமாச் செய்துள்ள திரு. ராம. சிவராமன் அவர்கட்கு மேற்படி படையின் அங்கத்தினர்களால் ஒரு பிரிவு உபசார விருந்து 18-11-41 இரவு நடத்தப்பட்டது. திரு. சிவராமன் அவர்கள் இதுகாறும் மேற்படி படைக்குச் செய்த அருந் தொண்டினைப்பற்றிப் பலர் பேசிய பின்னர் வந்தன உபசாரத்துடன் கூட்டம் இனிது நிறைவேறியது.

பின் நடந்த பொதுக்கூட்டத்தில் ஸ்ரீ ஏ. பெத்தபெருமாள் அவர்கள் புதிய காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### டாக்டர் லக்ஷ்மணஸ்வாமி முதலியாருக்குப் புதுக் கௌரவம்

அமெரிக்க ஸர்ஜன்கள் பட்டமளிப்பு விழா இம்மாதம் 3-ந் தேதி நடந்தபோது சென்னை வைத்தியக் கல்லூரித் தலைவர் டாக்டர் ஏ. லக்ஷ்மணஸ்வாமி முதலியாரை அமெரிக்க ஸர்ஜன்கள் சங்கத்தில் ஒரு மெம்பராகச் சேர்த்துக் கொள்வதாகத் தீர்மானிக்கப்பட்டது. இத்தகைய கௌரவம் ஒரு இந்தியருக்குக் கிடைப்பது இதுதான் முதல் தடவையாம்.

## சீனப் பெண்கள் முன்னேற்றம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

வைத்திய உதவி, ரணசிகிச்சை இவற்றிற்கான சாதனங்களைச் சேகரிப்பது, போர்வீரர்களுக்குக் குளிர்கால உடையளிப்பது இவ்வூழியங்களை இது செய்துவருகிறது. ஆஸ்பத்திரிகளில் உழைப்பதற்காக நூற்றுக்கணக்கான பெண்களுக்குப் பயிற்சியளித்திருக்கிறது. ராணுவத் தேவைக்கான சாதனங்களை உற்பத்தி செய்யவும் ஒரு தனி இலாகா ஏற்படுத்தியுள்ளது. காயமுற்ற வீரர்களுக்கு உடையளிக்க ஒரு தொழிற்சாலையை நடத்துகிறது. படையிற் சேர்ந்தவர்களின் குடும்பத்தார்களே இவ்வூழியங்களிற் சேர்க்கப்பட்டிருக்கின்றனர்.

அனாதைக் குழந்தைகள் இலாகாவில் 16 கிளைகள் இருக்கின்றன. யுத்த காரணமாகப் பல இடங்களிலிருந்தும் சேகரிக்கப்பட்ட சுமார் 25,000 குழந்தைகளை 49 விடுதிகளில் வைத்துக் காப்பாற்றுகிறது. இவர்கட்குக் கல்வியும் அளிக்கப்படுகிறது. சிறு சிறு கைத்தொழில்களும் கற்பிக்கப்படுகின்றன.

உற்பத்தி இலாகா பலதிறப்பட்ட கைத்தொழில்களையும் அபிவிருத்திசெய்வதில் முனைந்து நிற்பது. பட்டு உற்பத்தி, நெசவு, சித்திரத் தையல் வேலை இவைதான் முக்கியம். தூரப்பிரதேசங்களிலும் கைத்தொழில்கள், முக்கியமாகக் கூட்டுறவு முறையில் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு ஜில்லாவில் மட்டும் 1500 கூட்டுறவு மெம்பர்கள் பருத்தி உற்பத்தியில் ஈடுபட்டிருக்கின்றனர்.

சர்க்கார் ஊழியப்படைகளும் இருக்கின்றன. சர்க்கார் இலாகாக்களின் தலைவர்களுடைய மனைவியர் இந்த ஸ்தாபனங்களை அமைக்க வேண்டும். மந்திரி சபை மெம்பர்களின் மனைவியரும், மந்திரிகள் காரியாலயத்தாரின் மனைவியரை இவ்வூழியத்திற்காகத் தயார்ப்படுத்த வேண்டும். யுத்த மந்திரிசபை ஊழியப்படையில் 25,000 பெண்கள் இருக்கின்றனர். இதற்கு 50 கிளைப்படைகளு மிருக்கின்றன இவர்களெல்லாம் முழு நேரமும் வேலைபார்க்க வேண்டும்; மாதம் 5 ரூபா தான் அலவன்ஸ்; சம்பளமில்லை, உணவும் உறையுளும் இலவசமாக அளிக்கப்படுகின்றன.

ஜப்பானியப்படை வரிசைகளுக்குச் சமீப முள்ள பெண்களும் குழந்தைகளும் வேவுபார்க்கும் படையினராக அமைந்திருக்கிறார்கள். இன்னும் குரங்குப் படைப் பெண்கள், காக்கி உடையும், எஃகுத் தொப்பியும் அணிந்து ராணுவத்துடன் சேர்ந்து செல்லும் பெண்கள் படையினர் இவர்கள் எல்லாம் தத்தம் ஊழியங்களைச் சிலாகிக்கத்தக்க வண்ணம் நிறைவேற்றுகின்றனர். ஒவ்வொரு சர்க்கார் ஸ்தாபனத்திலும் பெண்களைக் காணலாம். அரசியல் சபையில் 15 பெண்கள் இருக்கின்றனர். பத்திரிகை உலகிலும் பெண்கள் ஊக்கம் செலுத்துகின்றனர். சீனாவில் நான் நடத்திய பத்திரிகைக்காரர்கள் மகாநாட்டிற்கு வந்திருந்த நிருபர்களில் அனேகமாக நேர் பகுதிப் பேரும் பெண்கள்தாம். மூன்று வருடங்கட்கு முன் சைனாவில் பெண்கள் நடத்தும் பத்திரிகைகளாக 2 தானிருந்தன; இன்றோ 50க்கு மேலிருக்கின்றன.

சைனாவின் புனருத்தாரண வேலைபற்றிய சரித்திரத்தைக் குறிப்பிடும்போது, ஜப்பானியத் தாக்குதலை எதிர்த்துச் சீனப் பெண்கள் ஆற்றியுள்ள ஊழியத்தைச் சொல்லா விட்டால் அந்த சரித்திரம் பூர்த்தியாகாது என்று ஸ்ரீமதி ஷியாங்கேஷேக்சொல்லுகிறார். மேனாட்டிலிருக்கும் கொள்கைகளை விட மிகப் புரட்சிகரமான புதிய கொள்கைகளைச் சீனாவில் துரிதமாக ஏற்றுக் கொள்கிறார்கள். மாறிவரும் நிலைமைக்கு ஏற்றபடி சீனப் பெண்கள் தமது திறமைகளை உபயோகித்துக் கொள்ளக் கற்றுக் கொண்டு விட்டார்கள். இதுவே சீன மாதரின் முன்னேற்றத்திற்குரிய காரணங்கள் என்கிறார் ஸ்ரீமதி ஷியாங்கே ஷேக்.

(THE HINDU)

## நோட்டீஸ்

### தேவகோட்டை டி. முன்சிப் கோர்ட்டு

O. P. No 65 of 1941

T. AR. CT. KR. RM. Ramanathan Chettiar alias Chidambaram Chettiar of Kondanoor } Petitioner

K. M. O. RM. O. Ramanathan Chettiar of Do. } Relation No. 2

மனுதாருடைய சம்ஸாரம் இறந்து போன RM. சிவகாமி யாச்சி பேருக்கு ரூ. 10,000-0-0 (பதினாயிரம்) க்கு இந்தியன் இன்ஷியூரன்ஸ் கம்பெனி (Head office: Karachi) யில்உள்ள 18893-நம்பர் Policy-யின்படி வரவேண்டிய தொகையை வசூலித்துக் கொள்ளும் பொருட்டு ஷை சிவகாமி ஆச்சியின் புருஷனான மனுதார்தனக்கு வார்சு சர்டிபிகேட்டு கொடுக்க வேணுமாய் ஷை நம்பரில் மனுச் செய்து கொண்டிருப்பதில் ஷை மனுவுக்கு நோட்டீசு வாய்தா 10-12-1941உக்கு ஏற்பட்டிருக்கிற தென்பதையும் ஷை மனுவுக்கு ஆக்ஷேபணையுள்ளவர்கள் ஷை தேதியில் கோர்ட்டில் தங்கள் ஆக்ஷேபணையை தெரிவித்துக் கொள்ளலா மென்பதையும் இதன் மூலம் அறிவிக்கப்படுகிறது.

தேவகோட்டை, 23—11—41. } G. Raghavan, மனுதார் வக்கீல்.

## உருளைக் கிழங்குக்கு வந்த யோகம்

### 2,700 டன் வற்றலுக்கு இந்தியாவில் ஆர்டர்

2,700 டன்னுக்கு மேற்பட்ட உருளைக் கிழங்கு வற்றலுக்கு இதுவரை இந்தியாவில் ஆர்டர் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதில் பெரும் பகுதியை இந்தியா முழுதுமுள்ள பல கம்பெனிகள் தயார் செய்து வருகின்றன. இதற்கென்று ஒவ்வொரு வாரமும் புதிய உற்பத்திச் சாலைகள் முளைத்துக்கொண்டே யிருக்கின்றன. சென்ற மாதத்தில் மட்டும் 16 புதிய உற்பத்திச் சாலைகள் ஜாபிதாவில் சேர்க்கப்பட்டுள்ளன. இவைகளுக்குச் சோதனார்த்தமாய்க் கொஞ்சம் ஆர்டர் கொடுக்கப்பட்டது. இவைகளில் சிலவற்றினோடு உருளைக் கிழங்கு சப்ளைக்காக ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டிருக்கிறது.







Edited, Printed and Published by S. MURUGAPPA for DhanaVysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi (S.INDIA).

